# கல்கி

KALKI. 10-2-80

90 காசு



# புதிய திருப்பம்

ஒளி கூட்டும் ஸ்டைல்கள்—
எழில் காட்டும்
புதிய பாணிகள் — உங்கள்
அழகுக் கோலத்தை
வெளிப்படுத்தும்.

**மபத்லால் இண்டஸ்ட்ரீஸ்** நியூ ஷொராக் மில்ஸ்
**மபத்லால் ஃபைன்**













சூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள்,
சேலைகள், மற்றும் உடுப்புத் துணிகள்

79/MFI/312-tm

# Pay Rs. 598/– and own a

# Solidaire

## SOLID STATE TV



**– that seldom fails!**

Balance in 24 easy instalments

# S.C.Shah

158, Mount Road, Madras 600 002.
Phone. 83375, 88671.

---

HMV
**fiesta**
*popular*







India's largest selling record player.

## HMV STEREO 1010



Rs 1484/-
Max. Rec. Ret. Price incl. Excise Duty. Taxes extra.




HMV STEREO SYSTEMS

*Available at :*

| RHYTHM HOUSE | ROYAL MUSIC CENTRE | SRI VIJAY AGENCIES |
|---|---|---|
| 69A, West Tower Street, Madurai Ph: 25522 | 136, West Masi Street, Madurai | 110, Dindigul Road, Madurai Ph: 24468 |

# Kalki Shopping Page



2 பேண்டு
புல்லெட்
நெல்கோ
டாடா தயாரிப்பு

*Available at :*

**ELITE RADIOS**
17, Ranganathan Street,
T. Nagar, Madras-600 017
Ph : 446649

**ARUNA & CO**
340, T. H. Road,
Madras-600 021
Ph : 553644 – 552728

**SWITO SALES CORPORATION**
357, Mint Street,
Madras-600 001 Ph : 38520

**VAUHINI RADIO & ELECTRICALS**
9, Woods Road,
(Near Odeon Theatre)
Madras-600 002 Ph : 88029

361, Mint Street,
(Near Sowcarpet Post Office)
Madras-600 001 Ph : 38785

**RADIO & ALLIED ENGINEERING CO**
85, Mount Road,
Madras-600 002, Ph: 810237

## ஆண்களுக்கு தையற்கலை வகுப்புகள்

நேரிலும் தபால் மூலமும் 2 மாத / 6 மாத பகுதிநேர / முழுநேர வகுப்புகளில் பயின்று சுயமாக பொருளீட்ட ஆண்களுக்கு அரிய வாய்ப்பு. ஷிப்டில் உள்ளவர்களுக்கு வசதி செய்யப்படும். செய்முறை வகுப்புகள், தமிழ், தெலுங்கு ஆங்கில மலையாள மொழிகளில் பயிற்சி அளிக்கப்படுகிறது. முற்றிலும் எளிய நவீன முறையில் நடத்தப்படும் ஒரே ஸ்தாபனம்.

நேரில் வரவும் (அ) விபர புத்தகம் பெற ரூ. 2-00 M. O. செய்க.

**வனஜ்**
**தையற் பள்ளி**
32, காந்தி இர்வின் சாலை எழும்பூர்
சென்னை-600008
(டென்னிஸ் ஸ்டேடியம் அருகில்)
(எந்த தேதியிலும் சேர்ந்துகொள்ளலாம்)

ஏன்
# வெஸ்டெர்லி?

**கவர்ச்சி–**
அழகுமிகு அமைப்புடன் நான்கு வித குளிர்ச்சிமிகு வண்ணங்களில் கிடைக்கிறது.

**சிக்கனம்–**
தனித்தன்மை வாய்ந்த சோக் ரெகுலேட்டர் மின்சாரச்செலவை 30% வரை மிச்சப்படுத்துகிறது.

**சிறப்பு–**
அதிக அளவு காற்றை அளிப்பதுடன் சப்தமின்றியும் சுழல்கிறது.

சிறந்ததை நாடுங்கள்—
வெஸ்டெர்லியை
வாங்குங்கள்

# வெஸ்டெர்லி

சீலிங் :பேன்களில் சிறந்தது

national 747

# அஞ்சல் "டிக்கெட்"

✖ வட இந்தியாவில் அஞ்சலகங்களில் தபால் உறைகளில் ஒட்டுவதற்கு "டிக்கெட்" கொடுக்கிறார்கள்! ஆம். இங்கெல்லாம் ஸ்டாம்பை டிக்கெட் என்றுதான் சொல்கிறார்கள்.

✖ டில்லியில் சர்வதேச ஸ்டாம்புக் காட்சி நடந்தது. பல லட்சம் ஸ்டாம்புகளை மூவாயிரம் போர்டுகளில் வகைப்படுத்தி இருந்ததைப் பார்த்து முடிக்க, பல நாட்களுக்கு நடந்தாக வேண்டும்.

✖ பிரெஞ்சுக்காரர் ஒருவர், மருத்துவ வரலாற்றை ஸ்டாம்புகளைக் கொண்டே படைத்திருக்கிறார். மற்றொரு பலகையில் இரண்டாம் உலக யுத்த வரலாறு காட்டப்பட்டிருந்தது, அஞ்சல் - வில்லைகளைக் கொண்டு.

✖ ஒழுங்காக அச்சிடாத ஸ்டாம்பு ஏதாவது தப்பித் தவறிப் புழக்கத்துக்கு வந்துவிட்டால், அதன் மதிப்பு ஓகோ என்று உயர்ந்துவிடுகிறது.

✖ பிரிட்டிஷ் கயானாவில் 1856-ல் வெளியான ஒரு வில்லை காட்சியில் இருக்கிறது. ஒரு சென்ட் என்று முதலில் விற்பனையான இந்த ஸ்டாம்பு இப்போது 76 லட்சம் ரூபாய்க்கு இன்சூர் செய்யப்பட்டுள்ளது. துப்பாக்கி துளைக்கமுடியாத ஒரு கண்ணாடி கவசப் பெட்டிக்குள் இது வைக்கப்பட்டு துப்பாக்கி ஏந்திய வீரர்களின் காவலுடன் காட்சியில் உள்ளது.

✖ இந்திய தபால் கார்டுக்கு இது நூற்றாண்டு. காலணா தபால் கார்டிலிருந்து பதினைந்து காசு வரை வந்துள்ள தபால் கார்டுகளில் சுமார் 50 வகைகள் உள்ளன. இப்போது நூற்றாண்டுக் கார்டு ஒன்றும், தபால்கார்டின் நூற்றாண்டு ஸ்டாம்பு ஒன்றும் தனியாக வெளிவந்துள்ளன.

✖ மறைந்த தலைவர்களுக்குத்தான் சாதாரணமாக அஞ்சல்தலை வெளியிடப்படுகிறது. விதிவிலக்கு: பதவியிலிருந்து ஓய்வுபெறும் ஜனாதிபதிகள். டாக்டர் ராதாகிருஷ்ணனுக்கு இவ்வாறு சிறப்பு அஞ்சல்வில்லை அச்சிட்டு, அவரிடமே வழங்கப்பெற்றது. அடுத்தது வி. வி. கிரிக்கு இவ்வாறு வெளியாயிற்று.

✖ காந்திஜியின் மறைவுக்குப் பிறகு, ராஜாஜி கவர்னர் ஜெனரலாக இருந்தபோது காந்திஜி உருவத்துடன் பத்து ரூபாய் ஸ்டாம்பு ஒன்று வெளியாயிற்று. கவர்னர்-ஜெனரல் உபயோகத்திற்காக "சர்வீஸ்" என்று அதன்மீது அச்சிட்டு ஒரே ஒரு பட்டை, (100 ஸ்டாம்புகள்) அவரிடம் தரப்பட்டதாம். இன்று அதில் ஒன்று உங்களிடம் கிடைத்தால் அதன் மதிப்பு பல்லாயிரம் ரூபாயாம்.

✖ மணி ஆர்டர் அஞ்சல் முறை பழக்கத்துக்கு வந்தும் சரியாக நூறு வருஷம் ஆகிறது.

✖ ரோலாண்டு ஹில் என்னும் ஆங்கிலேயர் முயற்சியால்தான் இன்றைய அஞ்சல் - வில்லை முறை பழக்கத்துக்கு வந்துள்ளது. அதற்கு முன்பெல்லாம் தபாலை அனுப்புபவர் பணம் தரவேண்டியதில்லை. தபாலைப் பெறுபவர் பணம் கொடுத்து வாங்கிக்கொள்ளவேண்டும். -அ. ஆ.

✖ கார்டுக்கு ஒரு ஸ்டாம்பு

✖ துப்பாக்கி துளைக்காத கண்ணாடி கவசத்திலுள்ள இந்த ஒரு சென்ட் ஸ்டாம்பு 76 லட்சம் ரூபாய் மதிப்புள்ளதாம்!

✖ அஞ்சல் வரலாறு கூறும் புதிய ஸ்டாம்புகள்

✖ நூற்றாண்டு விழா தபால் கார்டு



# என்ன பரிசு அளிக்கலாம்?



செம்பியன்

**பி**ரெஞ்சு ஜனாதிபதி கிஸ்கார்ட் அண்மையில் நமது தேசத்துக்கு விஜயம் செய்தபோது தலைநகரில் நமது தகவல் ஒலிபரப்பு மந்திரி ஸாதே அவருக்கு என்ன பரிசளித்தார் தெரியுமா?

காந்திஜியின் எழுத்துக்கள் அத்தனையையும் சேகரித்து நமது அரசின் புத்தகப் பிரசுர இலாக்கா வெளியிட்ட நூல்கள் ஒரு செட்! ஒரு செட் என்றால் இரண்டு மூன்று அல்ல; நான்கைந்தும் அல்ல; 74 பாகங்கள்! நிஜமாகத்தான்! எழுபத்தி நான்கு பாகங்கள்!

ஸாதே இதைப் பரிசளிக்கும்போது ஞாபகமாக, ''இங்கே காந்தீயம் வேணது கொட்டிக் கிடக்கிறது; சீந்துவாரில்லை. நிறைய ஏற்றுமதி செய்யத் தயாராக இருக்கிறோம். பிரான்ஸுக்கு வேணுமானால் சொல்லுங்கள். அல்லது அக்கம் பக்கத்து ஐரோப்பிய நாடுகளிலும் விசாரித்துச் சொல்லுங்கள்'' என்று கேட்டுக் கொண்டிருப்பார் என நம்புகிறேன்.

பிரெஞ்சு ஜனாதிபதி 74 புத்தகங்களைப் பார்த்து மலைத்துத்தான் போயிருக்க வேண்டும். ''அடேயப்பா! இந்தியர்கள் எவ்வளவு கெட்டிக்காரர்கள்! காந்தீயத்தை அரசியலிலோ, தொழிலிலோ, அல்லது வாழ்க்கையின் இதர அம்சங்களிலோ கடைப்பிடிக்கா விட்டாலும் அவரது கொள்கைகளை உள்ளடக்கிய எழுத்துக்களை ஒரு வார்த்தை கூடச் சிதற விடாமல் எவ்வளவு ஜாக்கிரதையாகச் சேமித்து 74 புத்தகங்களில் அடக்கி இருக்கிறார்கள்'' என்று அசந்துதான் போயிருப்பார்.

இந்தப் பரிசளிப்பு விஷயம் பற்றிப் பத்திரிகையில் படித்ததும் எனக்கென்னமோ 'நமது தலைவர்கள் பலருக்கும் பரிசுகள் கொடுத்தால் என்ன?' என்று தோன்றியது. கையை விட்டுப் பணம் செலவழிக்க எனது கஞ்சத்தனம் இடமளிக்காது போனாலும் கற்பனையில் தாராளமாகப் பரிசளிக்கத் தயாரானேன்.

முதலாவதாக நமது பிரதமர் பற்றி யோசித்தேன். பாவம் அவர் அடிக்கடி ''ரணங்கள் ஆற்றப்பட வேண்டும்'' என்று கூறி வருகிறார். ரணங்களோ லேசில் ஆறுவதாக இல்லை. எமர்ஜன்ஸி கால ரணங்களே இன்னும் ஆறாதபோது, அவர் எதிர்பார்ப்பதுபோல் ஜனதா — லோக்தள் ஆட்சி கால ரணங்கள் அவ்வளவு சுலபமாகவா ஆறப் போகின்றன? அஸ்ஸாமில் கிளர்ச்சி என்றதும் அவர் மீண்டும் ''ரணங்கள் ஆற்றப்பட வேண்டும்'' என்றார். உத்தரப் பிரதேசக் கிராமங்களில் போலீசார் அத்துமீறி நடந்து அக்கிரமங்களைப் புரிந்திருக்கின்றனர். அங்கும் ரணங்கள் ஆற்றப்பட வேண்டும் என்று நிச்சயம் இந்திரா காந்தி கருதுவார். ஆனால் எந்த ரணத்தையும் ஆற்ற முடியாமல் அவர் அவஸ்தைப்படுவதைப் பார்த்தால் நல்லதாக ரணம் ஆற்றும் மருந்து அவரிடம் இல்லை என்று புரிகிறது. எனவே என் தாத்தா நாளிலிருந்து என் குடும்பத்தில் ரணம் ஆற்றப் பயன்படுத்தப்பட்டு வரும் பர்னால் மருந்தைப் புதிதாக ஒன்று வாங்கிப் பிரதமருக்குப் பரிசாக அனுப்பலாம் என்ற முடிவுக்கு வந்தேன். தமது அறையில் சுவரில் தேசப் படத்தைத் தொங்க விட்டு விட்டு அதிலே ரணமான பகுதிகளிலெல்லாம் அவ்வப்போது பிரதமர் பர்னால் மருந்தைத் தடவி வரலாம்! அப்போதாவது ரணங்கள் ஆறுகின்றனவா பார்ப்போமே!

அடுத்து நமது இளம் சிங்கம் சஞ்சய்! அமேதி தொகுதியில் தேர்தல் பிரசாரத்தின் போது அவரும் அவரது சகாக்களும் அடிக்கடி, ''சஞ்சய் தேர்ந்தெடுக்கப்பட்டால் அமேதி லண்டன் மாநகரமாகும்'' என்று சொல்லி வந்திருக்கிறார்கள். அவர் மறுபடி அங்கு போகும்போது (ஒருவேளை போக நேர்ந்து விட்டால் என்ன பண்ணுவது?) யாராவது 'அமேதி இன்னும் லண்டன் ஆகவில்லையே' என்று கேட்டு விடலாம் அல்லவா? எனவே ''லண்டன்'' என்று ஒரு பெயர் பலகையில் அழகாக எழுதி அதனை சஞ்சய்க்குப் பரிசளிக்கலாம் என எண்ணுகிறேன். அவர் அமேதி சென்று அங்குள்ள அமேதி என்ற பெயர்ப் பலகையை நீக்கி விட்டு இந்தப் பெயர்ப் பலகையை நட்டு விட்டால் அமேதி லண்டனாகிவிடும் அல்லவா? தேர்தல் வாக்குறுதியை அவர் நிறைவேற்றியதாகவும் ஆகிவிடுமல்லவா?

ராஜ்நாராயண் ''இந்திரா ஹடாவோ'' என்ற கோஷத்தை இப்போது புதிதாக





ஆரம்பித்திருக்கிறார். ''லோக் தால் பச்சாவோ'' என்பது அப்புறம் வருமாம்! இத்திராவைத் தடுத்து நிறுத்துவது எப்படி? நமது போக்குவரத்துப் போலீஸ்காரர்கள் கரத்தில் ஸ்டாப் என்ற வார்த்தையுடன் சிறு ''கேடயம்'' வைத்திருக்கிறார்கள் அல்லவா? அது மாதிரி ஒன்று தயாரித்து ராஜ் நாராயணனுக்கு அனுப்பலாம் என்றிருக்கிறேன். அந்த 'ஸ்டாப்' பலகையை இந்திரா எதிரே அவர் உயர்த்திப் பிடித்துக் காட்டி விட்டால் 'இந்திரா ஹடாவோ' என்ற சொல்லை அவர் செயலாக்கியதாகி விடுமல்லவா?

பா. ரா.வுக்கு ஒரு தலையணையும் பாயும் பரிசளிக்கலாம். அதை அவர் தமது வீட்டு மொட்டை மாடியில் விரித்து மல்லாந்து படுத்து ''எம். ஜி. ஆர். ஏதோ மாணவப் பிரச்னை என்றாரே அது எங்கே இருக்கிறது?'' என்று மானத்தைப் பார்த்து ஆராய்ந்து கொண்டிருக்கலாம்.

கலைஞர் பாடுதான் இப்போது ரொம்பத் திண்டாட்டமாயிருக்கிறது. 'பால்டிகா—பல்கேரியா கப்பல் ஊழல்' என்றார்; புரட்சித் தலைவர் உடனே 'நீதி விசாரணைக்குத் தயார்' என்றுவிட்டார். சுப்ரீம் கோர்ட்டு 'தான் நீதிபதி யாரையும் அனுப்புவதற்கில்லை' என்று கூறிவிட்டது. அடுத்து, ''புதிய மதுவிலக்குத் தண்டனைகள் ரொம்பக் கடுமை; அதை ஒழிக்கப் போராடுவேன்'' என்றார் கலைஞர். உடனே புரட்சித் தலைவர் மதுவிலக்குச் சட்டத்தையே ஒரேயடியாகத் தளர்த்தி, ஒன்றுமில்லை என்றாக்கிவிட்டார். பிற்பட்டோருக்குச் சலுகை அளிக்கும் சட்டத்தில் வருமான வரம்பைப் புகுத்தியதற்காகப் போராட்டம் என்று ஆரம்பித்தார் கலைஞர். உடனே எம். ஜி. ஆர். அதை வாபஸ் பெற்றதோடு பிற்பட்டோருக்கு முன்னிலும் அதிகமான இடங்களை ஒதுக்கி விட்டார். ஆக, கருணாநிதி இனி எதற்குப் போராட்டம் நடத்துவது என்று புரியாமல் தவித்துக் கொண்டிருக்கலாம். சமீபத்தில் ''என்னை ஓட ஓட விரட்டினால் நான் பதவி துறந்து மறுபடி சினிமாவில் சேர்ந்து நடிக்க ஆரம்பித்து விடுவேன்'' என்று (தமது கட்சிக்காரர்களை?) மிரட்டியுள்ளார் எம். ஜி. ஆர். இந்த நல்ல வாய்ப்பினை டாக்டர் கலைஞர் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளலாம். ''என் அபிமான நட்சத்திரமான புரட்சி நடிகர் மறுபடி நடித்தே ஆகவேண்டும்'' என்று அவர் போராட்டம் நடத்தலாம். இதை டாக்டர் கலைஞர் மறக்காமல் இருப்பதற்காக ''எம். ஜி. ஆர். ரசிகர் மன்றம்'' என்று எழுதிய துணி பானர் ஒன்றை கருணாநிதிக்குப் பரிசளிக்க எண்ணுகிறேன். அதை அவர் தமது கோபாலபுரம் வீட்டு வாசலில் கட்டிக்கொண்டு அதனை எம். ஜி. ஆர். ரசிகர் மன்றத்தின் தலைமைச் செயலகமாகவே மாற்றிவிடலாம்!

''இவ்வளவெல்லாம் எழுதுகிறாயே நமது முதல்வர், புரட்சித் தலைவர் எம். ஜி. ஆருக்கு என்ன பரிசு?'' என்று கேட்கிறீர்களா? ஆ! நீங்கள் என்ன பரிசளிக்கலாம் என்று எண்ணுகிறீர்களோ அதையேதான் நானும் நினைக்கிறேன். ஆனால் பிளீஸ், நாட்டுச் சரக்கு வேண்டாம்; இறக்குமதியான நல்ல உயர் ரகமாகவே இருக்கட்டும்!



◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## கூடர்மலையே!

முத்தமிழே! முதுமலையே! மூவா சைவ
முடிவுகட்டும் இறையொளியே! எரிமலையே!

புத்தமுதாம் அருளொளியை அடியார்கட்குப்
படைக்கின்ற அண்ணாமலையே! ஞானப்

பித்தாக்கி முக்திதரும் தந்தாய்! எந்தாய்!
பிறப்பறுக்கும் அருட்சுடரே! ஒளிப்பி ழம்பே!

சித்தரெல்லாம் வலங்கொள்ளும் சிவனே! மாலும்
நான்முகனும் தெளிந்தேத்தும் இறைவே! போற்றி!

—வலங்கொண்டான்


ருஷ்யாவின் ஆப்கானிஸ்தான
ஆக்கிரமிப்பைக் கண்டித்ததற்காகப்
பாராட்டுகிறேன்!
அமெரிக்கா
பாக்.


பாராட்ட உங்களுக்கு
வேறு மாலை கிடைக்க
வில்லையா? இன்னொரு
வியட்நாம் உருவாயிடப்
போகுது.. ஜாக்கிரதை!


சௌந்தரபாண்டியன் தான் வில்லன். நீங்க தான் ஹீரோ!
படத்தின் டைட்டில் 'ஒரு நாற்காலி ஆடுகிறது!'
ஏப்ரலுக்கு முன்னாடியே கால் ஷீட் கொடுத்தா
வசதியா இருக்கும்!


இந்த திட்டம் சரிதான்.
ஆனா தி·மு·க· நாத்தத்தை
எப்படிப் போக்குறது?


பொரிசா திட்டம் போட்டாங்க!
இவங்க ஆட்சியிலேயே
இருக்கிற நாத்தத்தை
விடவா?
கூவம்-
பக்கிங்ஹாம்-
கால்வாய் நாற்றம்
போக்க ரூ.5
கோடி-
தமிழக அரசு திட்டம்

1980 பிப்ரவரி 10
சித்தார்த்தி தை 27
மலர்: 38 இதழ்: 28



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# ராஜினாமா செய்யுங்கள்!

நாடாளுமன்றத் தேர்தலில் தோல்வி காரணமாகத் தமிழகத்தில் அஇஅதிமுக, ஆட்சி நடத்த உரிமை இழந்து விட்டது என்ற கருத்தினை நாம் ஏற்கவில்லை. சட்டப்படி அதன் ஆட்சிக்காலம் முடிந்து மாநிலத்தில் மீண்டும் தேர்தல் நடக்கும் வரை அஇஅதிமுக ஆட்சி இங்கு தொடர்வதே நீதியும் நியாயமும் ஆகும்.

ஆனால் அண்மையில் மதுவிலக்குச் சட்டத்தைத் தமிழக அரசு தளர்த்தி அதனை ஒரு கேலிக் கூத்தாக்கி இருப்பதைப் பார்க்கும் போது; 'ஆட்சியில் இருப்போர் தங்கள் பொறுப்பைச் சரிவர நிறைவேற்றா விட்டால் மக்களுக்கு அவர்களைப் பதவி இறக்கம் செய்யும் உரிமை (right of recall) இருக்கவேண்டும்' என்று எம். ஜி. ஆரே அண்மையில் கூறியிருப்பதையும் அத்துடன் இணைத்து நோக்கும் போது, அஇஅதிமுக அமைச்சரவை ராஜினாமா செய்யவேண்டும் என்று கோர நாம் சற்றும் தயங்கவில்லை.

திமுகவிலிருந்து எம்.ஜி.ஆர்.வெளியேற்றப்பட்ட பின் கருணாநிதி ஆட்சியின் மூன்று முக்கியமான தவறுகளைத்தான் எம்.ஜி.ஆர் திரும்பத் திரும்ப மக்கள் முன் வைத்தார். அவை சர்வாதிகாரப் போக்கு, லஞ்ச ஊழல், மதுவிலக்கை ரத்து செய்தது ஆகியன. அவ்வாறிருக்க எம். ஜி. ஆர். மக்களுக்கு எந்த வாக்குறுதியை முக்கியமாக அளித்துப் பேராதரவு பெற்றாரோ அதை இன்று அவர் காற்றில் பறக்க விட்டபின் பதவியில் நீடிக்க அருகதையற்றவராகிறார். அண்ணல் காந்தியையும் ராஜாஜியையும் இன்னும் அவர்களைப் போன்ற மாபெரும் தலைவர்களையும் பரிகசிப்பது போல் அவர் மதுவிலக்கை இங்கு தளர்த்தியிருப்பது தமிழகத்துக்கே தலைகுனிவு. சென்ற தலைமுறைத் தலைவர்களின் தியாகங்கள், அவர்கள் அனுபவித்த கஷ்ட நஷ்டங்கள், ஏன், அவர்களுடைய உன்னத வாழ்க்கையின் பெரும் பகுதியையே வியர்த்த மாக்கி விட்டிருக்கிறார் எம்.ஜி.ஆர். முப்பது வயதுக்கு மேற்பட்டவர் யார் வேணுமானாலும் இருபத்தைந்து ரூபாய் செலுத்திக் குடிப்பதற்கு லைசென்ஸ் பெறலாம் என்பதும் ஒரு சட்டமா? திருடக் கூடாது என்றுதான் சட்டம் இயற்றலாமே யொழிய லைசென்ஸ் பெற்றுத் திருடலாம் என்று ஒரு சட்டம் இயற்றுவது? மக்கள் தங்கள் ஆரோக்கியத்தைக் கெடுத்துக் கொள்ள அரசாங்கமே லைசென்ஸ் வழங்கி அதில் பணம் பண்ணுவதா? வெட்கக்கேடு!

ஏன் இப்படிச் செய்தார்? எதிர்க்கட்சிகளுக்குப் பயந்தா?-அவர்கள் எதிர்த்துக்கொண்டேதான் இருப்பார்கள். இதில்லா விட்டால் இன்னொன்றைப் பிடித்துக் கொள்வார்கள். பாண்டியில் மதுவிலக்கு ரத்தாகும் என்றா?-இதற்கு முன்பும் ரொம்பகாலமாகவே தமிழகத்துக்கும் பாண்டிச்சேரிக்கும் இடையில் இந்த முரண்பாடு இருந்துதானே வந்திருக்கிறது? மது விலக்குச் சட்டம் தோல்வி அடைந்து விட்டதென்றா?-எந்தச் சட்டம்தான் நூற்றுக்கு நூறு முழு வெற்றி பெற்றிருக்கிறது? அண்மையில் கடுமையாக்கப் பட்ட தண்டனைகளால் மதுவிலக்குச் சட்டத்தை மீறும் குற்றவாளிகள் கொடுமைக் குள்ளாகிறார்கள் என்பதாலா?-அப்படி யென்றால் அந்தத் தண்டனைகளை மனிதாபிமானத்தோடு குறைத்து, குற்றவாளிகளுக்கு நல்லறிவு புகட்டும் சீர்திருத்தப் போக்கையும் நடை முறைக்குக் கொண்டு வர வேண்டியதுதானே? வோட்டுக்களைப் பெறவா இந்தப் புதிய ஏற்பாடு?-தமிழகத்திலுள்ள லட்சோபலட்சம் பெண்மணிகள் இனி எப்படி அஇஅதிமுகவுக்கு மனப்பூர்வமாக மகிழ்ந்து வோட்டுப் போடுவார்கள்? கட்சிக்காரர்களுக்குக் காட்டப்படும் சலுகையா இது?-அவ்வாறானால் மக்கள் நலனைவிடக் கட்சி நலன் எம்.ஜி. ஆருக்கு முக்கியமாகி விட்டதென்பது தானே அர்த்தம்?

இந்த லட்சணத்தில் ஆளுனர் பட்வாரி, மது விலக்குக் கொள்கையைத் தமிழக அரசு கைவிடவில்லை என்றும் தமிழகத்திலுள்ள பெண்மணிகள் எல்லாம் கணவன் மார்களைக் குடிக்காதே என்று வற்புறுத்தி, சத்தியாக்கிரகம் செய்ய வேண்டும் என்றும் போகாத ஊருக்கு வழி சொல்லுகிறார். பட்வாரி காந்தியவாதியாய்த் தம்மைக் கருதிக்கொள்வது மெய்யானால் அவர் இதற்குள் ராஜினாமா செய்து விட்டுத் தொண்டர் படை திரட்டிக்கொண்டு போய்க்கோட்டை வாசல் முன் நின்று சத்தியாக்கிரஹத்துக்கு வழி காட்டியிருக்க வேண்டும்.

# ஔவை கோயில் ஒன்றல்ல!

## வட்டமேஜை

● ஔவையார் கோயில் ஒன்றல்ல. குமரி மாவட்டத்தில் நான்கு கோயில்கள் உள்ளன. நெல்லை — குமரி எல்லைப் பகுதியில் உள்ள முப்பந்தலில் இரண்டு கோயில்களும், செண்பகராமன் புதூர் — தாழக்குடி பாதையில் ஒரு கோயிலும், அழகிய பாண்டியபுரத்தை அடுத்துள்ள குறத்தியறையில் ஒரு குடைவரைக் கோயிலும் உள்ளன.

நாகர்கோயில்—1 ப. நாகேஸ்வரி

● தஞ்சாவூர் மாவட்டம் திருத்துறைப்பூண்டித் தாலுக்கா துளசியாபட்டினம் கிராமத்தில் ஒரு ஔவையார் கோயில் உள்ளது.

வலிவலம் டி. ராஜேந்திரன்

● படைப்பிலேயே கோளாறு இருந்தால் தான் தேள் பிள்ளைப் பூச்சியாக மாறுவது, புலி பசுவாய் மாறுவது எல்லாம் சாத்தியம். இந்திரா காந்தி பழைய புலிதான். பசுத் தோல் போர்த்திய புலி என்பதைக் காலம் சொல்லத்தான் போகிறது.

மதுரை டி. ஆர். அலமேலு

● நீங்கள் விரும்பினால்கூட பழைய ''கொடுங்கோல்'' இந்திராவைப் பார்க்க முடியாது. நம்பப் பழகிக்கொள்ளுங்கள்.

திருச்சி—18 என். பாலு

● 'லாவண்யா' போன்ற படு மோசமான கதைகளைப் பிரசுரித்தால் என்போன்றவர்கள் கல்கியை வாங்காமல் நிறுத்திவிடுவோம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அம்மைநகர் சௌந்தர்

● பாரம்பரியம் வாய்ந்த தமிழ்ப் பண்பாட்டை மறந்து மனம் போனபடியெல்லாம் வாழ்க்கை நடத்தலாம் என்று நினைப்பவர்களுக்கு ''லாவண்யா'' சிறுகதை நல்லதொரு பாடம்.

செங்கோட்டை ஏ. எம். இராஜ்

● யார் சார் இந்த பெமினா? அவர் கதையைச் சொல்கிற பாங்கும் தெளிந்த நீரோட்டம் போன்ற நடையும்... வெரி குட்!

'லாவண்யா' மறக்க முடியாத கதை. தொடர்ந்து அவரது கதைகளை வெளியிடுங்கள்.

பாண்டிச்சேரி ஜோக்கிம் யூஜின்

● ஹலோ, கௌசிகன் சார்! 'பாம்பு நடனம் ஆடும் பெண்' என்று மொட்டையாக விமரிசித்திருக்கிறீர்களே வெள்ளாடு வேங்கையாகும் படத்தில். அவர் நமது தமிழ்நாடு அரசின் ஆஸ்தான நர்த்தகி என்பதும் அவரது பெயர் சொர்ணமுகி என்பதும் தங்களுக்குத் தெரியாதா? முதல்வரும், செய்தி, மக்கள் தொடர்புத் துறை அமைச்சரும் கோபித்துக் கொள்ளப் போகிறார்கள். 'எரிச்சல்' என்று சர்வ சாதாரணமாகச் சொல்லிவிட்டீர்களே அந்த நடனத்தை? படம் மொத்தத்துக்கும் அதிக நேரம் கைதட்டலைப்பெறுவது அந்த நடனம்தானே!

மதுரை சக்தி நாயனார்

● பாலகுமார் ''என்ன பொருத்தம்'' என்ற தலைப்பில் கொடுத்த செய்திகள் பொருத்தமற்றவை. 1977ம் ஆண்டு தேர்தலின் போது அல்ல ''நானே நமதே'' படம் வெளி வந்தது. அதற்கு எத்தனையோ காலம் முன்பே வந்து விட்டது. மேலும் தி.மு.க.வுக்கு அந்த நாடாளு மன்றத் தேர்தலில் இரண்டு எம். பி.க்கள் அல்ல; ஒரு எம்.பி. தான் இருந்தார். அவர்தான் மறைந்த தலைவர் திரு ஆசைத்தம்பி.

பாலக்காடு ரவி. சி.

● கடுகு பதில்கள் பகுதியில் 'ஸ்ரீராம ஜெயம்' எழுதுவதால் யாருக்கு என்ன பயன்? என்ற கேள்விக்காக ஒருவருக்கு ஐந்து ரூபாய் கிடைத்துள்ளது. ஒரு முறை 'ஸ்ரீராம ஜெயத்'தைப் பற்றி எண்ணி கேள்வி கேட்டதற்கே ஐந்து ரூபாய் கிடைத்துள்ளதென்றால், 'ஸ்ரீராமஜெயம், ஸ்ரீராமஜெயம்' என்று ஆயிரக் கணக்கில் எழுதுபவர்கள் அடையும் நன்மைகளை மதிப்பிட முடியுமா?

திருப்பாப்புலியூர் த. பட்டுமைந்தன்

● கல்லூரியில் குவிஸ் 5வது கேள்வி ''இஸ்லாமாபாத் நாட்டுக்கான....'' என்று போகிறது. பாகிஸ்தான் இஸ்லாமாபாத் நாடு ஆனது எப்படியோ? 14வது கேள்விக்கு திரு. விஜய் சரியான விடை கூறினாராம். 'பானுமதியா சரியான விடை? 'மிஸ் கமலா'வை டைரக்ட் செய்த ஸ்ரீமதி டி. பி ராஜலட்சுமி யல்லவா முதல் பெண் டைரக்டர்?

விஜயவாடா க.ரா.



✱ முப்பந்தலில் உள்ள ஔவையார் சிலை




...."These common appearances are large discoloured spots dispersed over the whole surface of the body. swelled legs, putrid gums, and, above all, an extraordinary lassitude of the whole body, especially after an exercise, however inconsiderable; and this lassitude at last degenerates into a proneness to swoon on the least exertion of strength or even on the least motion''

*ஸ்கர்வி நோயைப் பற்றி 1741ல் 'ஸெஞ்சூரியன்' கப்பலில் பிரயாணம் செய்த டாக்டர் வால்டர் எழுதியுள்ளது.*

கடலின் அமோக ஆர்ப்பரிப்பில் மாலுமி புதைந்து போக, பால்மர்ஸன் அயர வில்லை.

-கம் ஆன்! யாராவது மேலே ஏறுங்கள், சீக்கிரம்!

தளத்தின் எஞ்சியிருந்த மூன்று பாய்க்காரர்களும் மேலே ஏறத் தொடங்கினார்கள். அவர்கள் உடம்பும் துணிகளும் நனைந்திருந்தன. கைகளும் கால்களும் ஈரமாகி இருந்தன. காப்டனிடம் ஈரம் இல்லையே என்று மனத்தில் திட்டியவாறு ஏறினார்கள்...

பாயை மடக்குவதோ, பிரிப்பதோ எளிதல்ல! சோதனையான வேலை. சாதாரண காலங்களில் கூட ஒருத்தரது முழுத்திறனும் வேண்டியிருக்கும்.

இப்போது காற்று அடித்து. கப்பல் மூட்டோடு ஆடும் போது. அது ஒரு கிட்டத்தட்ட முடியாத வேலை. ஆபத்தானதும் கூட.

புயல் சீராக ஏறிக்கொண்டிருந்தது, கடல் பெரிய மேடு பள்ளங்களை ஏற்படுத்த, ஜுலி அலைகளில் ஏறுவதும் பாதாளத்தில் விழுவதுமாக இருந்தது. அதன் மரச் சட்டங்களும், பிணைப்புக்களும் இணைப்புகளும் பெருத்த ஓசையோடு கூச்சல் போட்டன.

அடிக்கடி மரங்கள் முறிவதுபோல் இடிச்சத்தங்கள்.

எல்லோரும் திடுக்கிட்டு என்ன நிகழுமோ என்று அஞ்சி அலமந்தார்கள்.

பால்மர்ஸனுக்குக் கோபம் வந்தது. எல்லா ஆட்களும் என்ன ஆனார்கள்? எல்லாருக்குமா ஸ்கர்வி வந்திருக்கிறது? சும்மா ஏமாற்றுகிறார்களா?

கீழ்த்தளத்திற்குப் போக விரும்பி, விறு விறுவென்று ஏணியில் இறங்கினார்.

பத்து படிகள் இறங்கியதும் ஆயாசம் பெரிய இறக்கையோடு அவரை மூடியது. கம்பிப்படியில் உட்கார்ந்தார்.

கப்பல் ஒரு முறை சாய்ந்து அவரை ஏணி இரும்பில் மோதியது.

தடுமாறினார். மூச்சு இரைத்தது.

ஆயாசம் அடங்க நேரம் எடுத்தது.

பிறகு பழைய சீற்றத்தையும், வேகத்தையும் பிடித்துக்கொண்டு கீழே இறங்கத் தொடங்கினார்.

இறங்க இறங்க இதென்ன நாற்றம்.! இதென்ன வீச்சம்!

கப்பலின் கர்ப்பத்துள் போவது போல இருந்தது.

ஒரே இருட்டு மயம்.

காற்றும் வெளிச்சமும் முதல் தளத்தோடு நின்று விட்டது.

கைக்குட்டையால் மூக்கை மூடி இருட்டில் இறங்கி, இரண்டாம் தளத்தை அடைய,

மெள்ள மெள்ள தளத்தின் காட்சி கண்ணில் உற்பத்தியாகியது.

தளம் முழுதும் தூளிகள். (ஹாம்மாக்) நெருக்கமாக அவை தொங்கின. கப்பல் சட்டத்தின் படி ஒன்றுக் கொன்று இடையே பதினைந்து அங்குல இடைவெளி இருக்க வேண்டியவை.

இங்கே ஒரு அங்குலம் கூட இல்லாமல் நெருக்கி அடிக்க, கப்பலின் ஆட்டத்தோடு அவையும் ஆட,

அதில் படுத்திருந்த நோயாளிகள் அனைவரும் உபாதையால் ஆ, ஊ என்று பயங்கரமாக அலறிக் கொண்டிருந்தார்கள்.

-எங்கே தச்சர்கள்? என்று கத்தினார் காப்டன்.

## 6

**போ**லீசார், வண்டியை நிறுத்திக் கனிநாகலாபுரம் யார் யார் போகிறார்கள், யார் வீட்டுக்குப் போகிறார்கள்? என்று விசாரித்தனர்.

மல்லிக்கும் கோபியும் கோயில் அர்ச்சகர் பெயரைச் சொல்லித் தப்பித்தார்கள்.

வண்டி மீண்டும் புறப்பட்டபோது அதைப் பற்றி ஒரு கசா முசா சத்தம் பஸ்ஸின் இரைச்சலை விட அதிகமாக இருந்தது.

—சொந்த வீட்டுக்குப் போறதுக்குக்கூட பாஸ்போர்ட் கேட்பாங்க போல இருக்கே! என்று கீச்சுக் குரலில் ஒருவர் கத்த, சிலர் மட்டும் புரிந்து சிரித்தார்கள்.

ஊர் வந்ததும் இறங்கினார்கள்.

வெளுப்பு மணலில் நடந்து, தெருவை அடைந்து உள்ளே நுழைந்ததும், திண்ணையில் அவள் உருந்து புடைத்துக் கொண்டிருந்தாள்.

ஒரு காலைக் குத்திட்டு, ஒரு காலை மடித்து வைத்திருக்க, குத்திட்ட காலில் கத்திரிப்பூ பாவாடை அபிஷேகமாக வழிந்திருந்தது. கொஞ்சம் கோணலாக உட்கார்ந்து,

களகைச் சளக் சளக்கென்று கோதிக் கொண்டிருந்தாள்.

சுனைக்கு ஒரு நாக்கு முளைத்தது போல் உளுந்து மேலே போய்ச் சுனையில் விழுந்து கொண்டிருந்தது.

அவர்களைப் பார்த்ததும் சுனையை நிறுத்தினான். ஒரு புன்னகை மொட்டு மெள்ள உதட்டில் வந்து குறுகுறுத்தது. கண்கள் பழைய பரிச்சயத்தில், குசலம் கேட்க எத்தனித்தன.

அவர்கள் திண்ணைக்கு வந்தார்கள்.

....கோயிலேயே தூக்கிட்டுப் போயிருவாங்க எத்துவாளிங்க....

இவர்கள் எத்துவாளிகளா, நல்லவர்களா?

—மிஸ்....

—என் பெயர் சம்பகா!

—தேங்க்யூ. எம்பேர் மல்லிக். இவன் பேர் கோபி. ஒரு காரியமா வந்திருக்கோம். உங்க வீட்டைச் சொல்லித்தான் தப்பிச்சோம். போலீஸ்காரங்க பிடிக்கறாங்க.

—ஆமா; ஊரைச் சுத்திக் காவல் போடச் சொல்லிட்டா.

—யாரு?

—தாசில்தார்.

—எதுக்கு?

—நிறையப் பேர் புதையல் தேட வராங்க. ஒரு வடக்கத்தி ஆளு கூட வந்துட்டாரு...

மல்லிக்குக்குச் சுருக்கென்று தைத்தது. தன்னைவிடப் புத்திசாலிகள் எவ்வளவோ பேர் இருக்கிறார்கள். ஆனால் வெறும் புதையலைத் தேடி வந்திருப்பார்களா? அல்லது கப்பலைத் தேடி....

நிச்சயம் கப்பலைத் தேடி வந்திருக்க முடியாது. பிரத்தியேக அறிவு வேணும் அதற்கு...

—இப்போ... நாங்க ஒரு காரியமா....?

வார்த்தைகளைக் கொஞ்சம் இழுத்தான்.

—என்ன காரியம்னு சொல்லுங்க, தயங்கறீங்களே!

குத்திவிட்ட காலைச் சுற்றிக் கைகளை வளையம் கோத்து மெள்ளத் தாலாட்டம் செய்தாள்.

அப்போது, அந்தக் கத்தரிப்பூக் கொசுவங்களில் ஏற்படும் பிரிவுகளைக் கவனித்து விட்டுக் கோபியின் நெஞ்சு படக் படக்கென்று அடித்தது.

—ஒரு விஷயம்! கொஞ்சம் ரகசியம், பெரிய ரகசியமும் இல்லே...

அவனுக்குச் சிரிப்பு ஓடி வந்தது. சிரமப்பட்டு அதை மூடிக் கொண்டு,—சொல்லுங்க, என்றான்.

—நா ஒரு வம்சாவளியைத் தேடிட்டு வந்திருக்கேன்.

—சரி!

—பால்மர்ஸன்னு ஒரு கப்பல் தளபதி! அவனோட வம்சம்!

—சரி!

—நா அந்த பாட்டைப் பார்த்துட்டேன்னு ரொம்ப உதவியா யிருக்கும்.

—சரி!

—அதுக்கு வழி செய்ய முடியுமா?

—அந்த எறும்புக் கூட்டோடு கிடைச்ச பாட்டா?

—ஆமா!

—ஐயோ, அது கிருஷ்ணன் கிட்டே இருக்கு. என்னைத் தொலைச்சுடுவாரு.



அவன் முகம் அணைந்தது.

உதட்டை மென்று, அங்குமிங்கும் பார்த்தான். —இல்லே, மிஸ்...சம்பகா! அதைப் பார்த்துட்டோம்னு எங்களுக்குப் பெரிய சந்தேகம் தீர்ந்த மாதிரி.... நீங்க கொஞ்சம் தயவு வச்சா....



—தயவு வச்சா?

—கிருஷ்ணன் பாட்ஜைக் காண்பிப்பாரு.

—நிச்சயம் மாட்டாரு! அவர் சுபாவம் உங்களுக்குத் தெரியாது.

மல்லிக்குக்குச் சர்வ நாடியும் விழுந்தது.

சிறிது நேரம் தயங்கினான்.

—அப்போ, உங்களாலே முடியாதா? என்றான் மெதுவாக.

—நிச்சயம் முடியாது.

அவன் தலை குனிந்து நடக்க, கோபி அவனுடன் சேர்ந்து கொண்டான்.

இருவரும் பஸ் ஸ்டாண்டை அடைந்த போது, —வேறு ஏதாவது வழி இருக்கிறதா? என்றான் கோபி.

—எதுக்கு?

—அந்த பாட்ஜைப் பற்றித் தெரிந்து கொள்ள.

—அதைத்தான் யோசிக்கிறேன். எனக்கு ஒரே ஒரு உதைப்பு. எச். எம். எஸ். போட்டவங்க ஜே போட நிறுத்த மாட்டாங்க. முழுசாப் போட்டிருக்கணும். ஜே வியே நிறுத்தினதாலே உதைக்கிறது. என் அனுமானம் எல்லாமே தப்பிதமோன்னு தோணுது.

—அப்படி ஒண்ணும் ஆகாதுடா!

—நீ சொல்றே, சரி! ஆயிடுத்துன்னு?

பஸ் ஸ்டாண்ட் என்பதற்கு எந்த அறிகுறியும் கிடையாது. இரண்டு வேப்பமரங்கள் பின்னிக்கொண்டு வளர்ந்து, கீழே பழங்களை உதிர்த்திருந்தன.

ஒரு துண்டு கட்டிய சிறுமி கொட்டாங் குச்சியில் பழங்களைப் பொறுக்கிக் கொண்டிருந்தான்.

பக்கத்தில் அந்த ஒரே ஒரு 'மல்டி பர்பஸ் கடை' 'பன்'னையும் விற்றது; பத்திரிகையையும் விற்றது.

ஒரு கலரை வாங்கிக் குடித்து, —இப்போ என்ன செய்றதுடா? என்றான் கோபி.

—இரு.....!

கலரைக் கொஞ்சம் முகம் சுளித்துக் குடிக்க வேண்டி வந்தது.

....ஒரு காரியம் பண்ணுவோம்; ஊரிலே வயசானவங்க யாரையாவது தேடணும்.

பெரிய ஏப்பம் விட்டான்.

—கடைக்காரரே! ஊரிலே ரொம்ப வயசானவங்க யாராவது இருக்காங்களா?

—ரொம்பன்னு எத்தினி வயசு?

—ஒரு எழுபது வயசுக்கு மேலே...

—அண்ணாவி இருக்காரு!

—அவர் யாரு?

—பஞ்சாயத்து நாட்டாரோட அப்பாரு. தொண்ணூத்து மூணு வயசு. அந்தக் காலத்திலே திண்ணைப் பள்ளிக்கூடம் நடத்தினாரு.

—இந்த ஊர்லே இருந்தவர்தானே?

—இங்கயே பிறந்தாரு. இங்கயே வளர்ந்தாரு. பழைய கதையெல்லாம் சொல்லுவாரு.

அப்படித்தான் அவர் சொன்னார்.

மகாபாரதத்திலிருந்து ஆரம்பித்து வம்சாவளி நீட்டிக் கொண்டு வந்தார்.

அந்த ஊரிலே அர்ச்சுனன் வந்து வேட்டையாடினதாகவும், தண்ணீருக்காக பூமியை வெட்டப் போய் லிங்கம் வந்ததாகவும் கூறினார்.

புராணத்திலிருந்து மெள்ளத்தான் சரித்திரத்தைப் பிரித்து எடுக்க முடியும்.

—ஊரில் கடலூரும் கோயிலும் பிரமாதமா இருக்கே! ஏதாவது விசேஷம் உண்டா?

—ஆழித் தழுசு தழுக்கும் (ஆடித் தபசு நடக்கும்) என்றார் கிழவர். பொக்கை வாய் நிறைய மூணுக்களை கீழே கொட்டியது.

—அதச் சொல்லலே! கடல் பக்கம் இருக்கே! அந்த நாளிலே கப்பல் கிப்பல் வருமான்னு....

—அதெல்லாம் வராது. ஊரு குக்கிராமம். மேடு.

—புயல், கியல் வருமா?

—வரும்! வந்தா அந்த நாள்லே கப்பல் கிப்பலைக் கொண்டு தள்ளுமாம். எங்க பாட்டனாரு சொல்லியிருக்காரு.

—எங்கே தள்ளுமாம்! ஊர் கரை யிலயா?

—அதெல்லாம் தெரியாது! அந்தாண்டை ஆத்துப் பக்கத்திலே இருக்கும்.

—வேறே என்ன சொன்னாரு?

—இவ்வளவுதான் சொன்னாரு.

—யோசிச்சுப் பாருங்க தாத்தா!

தாத்தாவுக்குக் கோபம் வந்தாப் போல. முகத்தைச் சிடுசிடுத்து, —எதுக்கு யோசிக்கணும்; தெரிஞ்சதைச் சொன்னேன். சொல்லியாச்சு. எங்க பாட்டனாரு பாய் மரத்திலே போய் இளநி விப்பாராம்! சொல்லியிருக்காரு. வெள்ளைக்காரன் கப்பல் வருமாம். இளநி. வேர்க்கடலை, காய்கறி எல்லாம் விப்பாராம். ஊரு செளிச்சதுடான்னு சொல்லியிருக்காரு. அவ்வளதான்! எல்லாம் ஆச்சு! போங்க....போங்க....

என்று அவ்வளவு வார்த்தைகளையும் ஒரு சின்னக் கோயில் மணி போல் மூணு மூணு வென்று முணுத்துவிட்டு, மெதுவாக உலேந்து வெகு நீளமான கால்களை நீட்டிப் படுக்க, அவரது கம்பு தொடக்கென்று கீழே விழுந்தது. ரொம்ப சுவாரசியமான கட்டத்தில் படம் 'கட்'டான மாதிரி.

கொஞ்சம் தயங்கி நின்று, இனிமேல் மசியாது என்று தெரிந்த பிறகு, மெள்ள வெளியே வந்தான் மல்லிக். வாசலில் கன்றுக் குட்டி அவனைப் பரிதாபமாகப் பார்த்தது.

புழுதியில் நடந்தார்கள்.

—நீ ரொம்ப அவசரப்பட்டுட்டே, என்றான் கோபி.

—அப்படியா சொல்றே? என்றான் மல்லிக்.

—ஒரே நாள்லே ஒரே இண்டர்வியூவிலே எல்லாத்தையும் கறந்துட முடியுமா? கிழவருக்கு ஒரு வாழ்க்கையிலே பல ஜன்மங்கள் இருக்கு! அவரோட ஒவ்வொரு பருவமும் ஒவ்வொரு ஜன்மந்தான். அதில் எதிலயாவது அவர் தோண்டி விஷயத்தை எடுக்கணும்னு நாம்ப டயம் கொடுக்கணும்! இதப் போல ஒரேயடியா ஒரே நேரத்திலே.:..

பூவரசு நிழல்களைப் பூசிக் கொண்டு நடந்தார்கள்.

மல்லிக்கின் மனம் யந்திர வேகத்தில் ஓடியது. ஒரு விஷயம்! அது போதும்! புயல் வருமாம்! கப்பல், கிப்பல்களை இங்கே கொண்டு தள்ளுமாம்! அடேடே! எவ்வளவு பெரிய செய்தி.... பெரிய செய்தி!—மனத்துக்குள்ளே ஒரு பெரிய மல்லிக் கையைத் தூக்கி வானத்தில் எறிந்து கூவினான்.

இருவரும் ஒரு மதகடிப் புல் தரையில் உட்கார்ந்துகொள்ள, மல்லிக் அந்த ஓடையில் துள்ளும் மீன் துணுக்குகளைப் பார்த்தவாறே சிந்தனைக்குள் பெரிதாக ஓடிக்கொண்டிருக்க, கோபி மெள்ள நழுவி, ஒரு பரந்த நெல்லி மரத்தை நோக்கி நடையைக் கட்டிக் கொண்டிருந்தான்.

சிறிது நேரமாகி, கொஞ்சம் சுய நினைவு வரும் வேளையில், அருகில் நிழல் வருவதைப் பார்த்து, —கோபி, எங்கேடா போயிருந்தே? என்று சொல்லி அவன் வேகமுடன் திரும்ப, அங்கே அந்தப் பெண் ஒரு கல் மீது, ஒரு கிராம தேவதை போல் நின்றிருந்தாள்.

கண் அவன்மீது தீவிரமாக விழுந்திருந்தது

(தொடரும்

## சர்வமத சமரசக் கோவில்

கோவிலின் கர்ப்பக் கிரகத்தில் பிரதிஷ்டையாகி இருப்பது சிவலிங்கம். அர்ச்சகர்களோ வைணவர்கள்! கோவிலை நிறுவிப் பரம்பரை பரம் பரையாகப் பரிபாலனம் செய்பவரோ சமணர்கள். கோவிலுக்கு ஏராளமாக நேர்த்திக் கடன் செலுத்துபவரோ முஸ்லிம்கள் - கிறித்தவர்கள்! இத்தகைய சர்வமத சமரசக் கோவிலாய்த் திகழும் ஸ்ரீ மஞ்சு நாதஸ்வாமி கோவில் கர்நாடக மாநிலத்தில் உள்ளது. மங்களூரிலிருந்து ஐம்பது மைல் தூரத்திலுள்ள ஸ்ரீ தர்மஸ்தலா விற்குச் செல்வோர் யாருமே இப்படியொரு காணக் கிடைக்காத காட்சியைக் கண்டு களிக்கலாம்.

-என். எஸ். முத்துகிருஷ்ண ராஜூ



**சா**யந்திரம் டியூஷனை முடித்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பும்போதுதான் நடராஜன் அவனைச் சந்திக்க நேர்ந்தது. அவர் தண்டையார்பேட்டையின் 'மெலிந்த' மனிதர்கள் வாழும் சரக்கு 'மலிந்த' ஒரு சந்தைக் கடக்க முயல்கையில்தான் சூறாவளி வேகத்தில் அவன் எதிர்ப்பட்டான்.

''சரக்கு வேணுமா, சார்?....''

கேட்டுவிட்டுத்தான் ஆளையே பார்த்தான். சல்பேட்டா புதுச் சரக்கை வாயில் ஊற்றி யதும், வயிற்றில் தீப்பிழம்பாய்க் கிளர்ந் தெழுமே, அப்படி ஒரு 'பகீர்!'

வாத்தியார்!

'ஆனா', 'ஆவன்னா' — அரிச்சுவடி கற்றுக் கொடுத்த நடராஜ வாத்தியார். கார்ப்ப ரேஷன் ஸ்கூல் பையன்களுக்குச் சிம்ம சொப்பனமாக இருந்த 'ஐயர் வாத்தியார்.'

ஏறிட்டு நோக்கிய நடராஜன் திகைத்து அவனைப் பார்த்துக் கொண்டிருக்கையில் அவ ரது மாஜி மாணவனும் இன்றைய சாராய வியாபாரியுமான துரைசாமி என்ன சொல் வது — என்ன செய்வது என்று புரியாமல் அவரைச் சங்கடத்துடன் பார்த்துப் பின்பு அவரின் பார்வையைத் தவிர்க்க முயன்றான்.

நினைவுகள் பின்னோக்கி ஓடின.

''டேய் துரைசாமி!''

''சார்!''

''பச்சைத் தண்ணியிலே கலர் பவுடரைக் கலக்கி நம்ம பசங்களிடம் கிளாஸ் அஞ்சு பைசான்னு வித்து, அதிலே வர்ற பணத்தை எடுத்துண்டு சினிமாவுக்குப் போறி யாமே, மெய்தானா?''

''ஐயையோ! அடிக்காதீங்க சார்! இனிமே அப்படிச் செய்ய மாட்டேன் சார்!...''—

கண நேர மின்னலாய் இருவரின் மனத் திரையிலும் பழைய நிகழ்ச்சியொன்று பளிச்சிட—

வாத்தியார் அடித்ததைத் துரைசாமி அவன் பிதாவும், பேட்டை 'பிஸ்தா'வுமான காத்த வராயனிடம் முறையிட, அவன் நீட்டிய பிச்சுவாவுடன் மறுநாள் கார்ப்பரேஷன் பள்ளிக்கூடத்தில் நடராஜனிடம் 'பகுல்' காட்டி ரகளை செய்ய, போலீஸ் வந்து அவ னைப் புறமுதுகு காட்டச் செய்த பின்னால், மகனைப் பள்ளிக்கூடத்துக்கு முழுக்குப் போடச் சொல்லிவிட்டு, தனது பரம்பரைத் தொழி லான 'தண்ணி' வியாபாரத்தில் மூழ்கிட வைத்து, ஓர் 'அறப்புக் கேஸில்' அவன் 'உள்ளார போய்விட.....

துரைசாமி அந்த ஏரியாவின் பிரபல சாராய வியாபாரி ஆகிவிட்டான்.

இடையில் ஒரு நாள் பல்லவப் பேருந்தில் நடராஜனைத் திடுமென்று சந்திக்க நேர்ந்த போது அரை குறையாய்க் 'குட்மார்னிங்' வைத்த துரைசாமி, தான் தனியாக பிஸி னஸ் செய்து பிழைப்பதாகக் கூறி அவரை நம்பவும் வைத்துவிட்டான். நடராஜனும் சற்று மகிழ்ந்து போனார் — ஏதோ ஒரு வழியில் உருப்பட்டால் சரிதானென்று.

ஆனால் இன்று....?

''தொரசாமி அண்ணே?... போலீஸ் வான் வருதாம்.... ஓடியாந்துடு...!''

'பைலட்'டாய் ஒரு பையன் ஓடிவந்து அவசரமாய் வார்த்தைகளைக் கக்கி விட்டுப் பக்கத்துச் சந்தில் அடைக்கலம் புகுந்தான்.

தர்மசங்கடத்தில் மாட் டிக் கொண்டிருந்த துரை சாமியும் இதுதான் சாக்



சென்று சடக்கென்று இன்னொரு சந்தில் அபயம் தேடி ஓட—

நடராஜன் மட்டும் ஒன்றும் புரியாமல் அப்படியே நின்றிருந்தார்.

போலீசைக் கண்டு அவர் ஏன் ஓடவேண்டும்? மடியில் 'சரக்கு' இருந்தால்தானே போலீஸ்காரனிடம் பயம்?

சகதியை வாரி இறைத்துக் கொண்டு ஒரு போலீஸ் வான் வந்து நின்று பெருமூச்சு விட்டு ஆசுவாசப் படுத்திக் கொண்டது.

காக்கி உடையில் சேறு படாவண்ணம் நாசுக்காய் வெளிவிருந்து குதித்த நான்கு கான்ஸ்டபிள்கள் இரண்டொரு 'இளப்பமான மனிதர்'களைப் பிடித்து உலுக்கிய பின்னாலே நடராஜனிடம் வந்தார்கள்.

காத்தியை இன்னும் பைத்தியக்காரத் தனமாய் நினைத்துக் கொண்டிருக்கும் நடராஜனின் எண்ணத்தைப் பிரதிபலிக்கும் கதர் சட்டை — 'தொளதொளா.'

''என்யா! பார்த்தா பெரிய மன்சன் மாதிரி கீறே... நீயுமா 'தண்ணி' போட வந்தே?....''

பேட்டைக்குள் நுழைந்தவுடனேயே அந்தப் பேட்டை பாஷையிலேயே பேசும் பழக்கமுள்ள போலீஸ்காரர் நடராஜனிடம் கேட்டார்.

அவர் கொடுத்த மரியாதையே அதிகபட்சமாகத் தெரிந்தது போலிருக்கிறது இன்னொரு போலீஸ்காரருக்கு. அவர் நடராஜனை வேகமாய் நெருங்கினார். ''யோவ் பெயவா! ஒத வாங்கறதுக்கு முன்னாடி சொல்லிடு... எங்க போய் தண்ணி போட்டே?... எங்கய்யா வச்சிக்கிறானுங்க சாராய 'கேன்'களை?...''

நடராஜன் மௌனம் சாதித்தார். முகத்தில் வேதனையின் கீறல்கள் வெகுவாய் நர்த்தனமாடின.

இப்போது மூன்றாவது போலீஸ்காரர் முன்னால் வந்தார். ''ஏய் சோமாறி! நாங்க பாட்டுக்குக் கேட்டுக்கினே கீறோம். நீ இன்னா ஊமமாடு கணக்கா 'கம்முனு' கீறே? 'கமால்' காட்றியா எங்க கிட்டே?.... வாயை!''

இந்த நாட்டின் அறியாமை இருள் நீங்கத் தினம் தினம் ஓதிக் கொண்டிருக்கும் அந்த வாய் ஊமை மறுத்தது.

''வீணாக என்னைச் சோதனை செய்ய வேண்டாம். நான் குற்றவாளிதான். என்னைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைச்சுக்கிட்டுப் போங்க....'' — எந்தவித உணர்ச்சியையும் வெளிக்காட்டிக் கொள்ளாமல் மெதுவே சொன்னார் நடராஜன்.

ஐயம் தோய்ந்த பார்வையை அவர்மீது பரவவிட்ட போலீஸ்காரர்கள் இப்போது அயர்ந்து விட்டனர். 'சரியான 'குடாக்' காய் இருப்பான் போலிருக்கிறதே!

நான்காவது போலீஸ்காரர் சொன்னார்: ''சரி, சரி. நம்ம இன்ஸ்பெக்டர் கிட்டே காட்டுவதற்கு நமக்கும் ஒரு ஆள் வேணுமில்லியா?... இதுவும் சரியான அரை லூஸ் போலிருக்கு... குத்தவாளின்னு அதுவே ஒத்துக்கிடுது... இந்தக் கெழத்தைத் தள்ளிக்கிட்டு வாங்க....''

இரவு ஏழு மணி.

குற்றமெதுவும் செய்திராத நடராஜன் லாக்கப்பினுள் குத்துக்காலிட்டு அதில் முகத்தை ஆழ்த்தி 'மௌனத் தவம்' புரிந்து கொண்டிருந்தார்.

''யோவ் கண்ணாடிக் கெழவா! இன்ஸ்பெக்டர் கூப்பட்றார். வெளியே வா!...''

போலீஸ்காரரின் கர்ண கடூரமான அழைப்பில் நடராஜனின் சிந்தனைக் கயிறு படீரென அறுந்துக்கொள்ள அவர் மெதுவே எழுந்து தள்ளாடி நடந்தார்.

நடராஜனை அலட்சிய வீச்சாய்ப் பார்வையைப் பதித்தவன், திடுக்கிட்டுக் கூர்ந்து நோக்கி, பதை பதைத்துப் 'பட்'டென்று ஆசனத்தை விட்டு எழுந்து நின்று, பவ்யமாய், ''வணக்கம் சார்!'' என்றான் — இன்ஸ்பெக்டர் சிவராமன்.

அவன் வணக்கத்தின் மோதலில் அதிர்ச்சியுற்ற நடராஜன் வியப்பு விழிகளில் மிளிர, அவனைக் கண்ணாடி வழியே கூர்ந்து நோக்குகையில் எங்கோ கேட்ட குரலாய்.... ஓ.... மாணவன் சிவ... இருஞ்.... நோ.... சிவராமன் இல்லையா இவன்?

என்றைக்கும் மறக்க முடியாத 'இன்டலிஜன்ட்' ஸ்டூடன்ட்! ஓ... அந்த மீசைதான் அவன் முகத்தை மாற்றி, இதுவரை அடையாளம் தெரியாமல் ஏமாற்றி விட்டதோ?

''என்னை அடையாளம் தெரியுதா சார்?'' சிவராமன் உணர்ச்சிப் பரவசத்தில் வினவினான்.

இதயத்தில் குடியேறியிருந்த கனம் சற்றே குறையப் பெற்றவராய் லேசாய்ச் சிரிக்கிறார் நடராஜன். ''என்ன சிவராமன்?... மீசையும் காக்கி உடையும் புதிதாய் உடலில் ஏறிவிட்டால் வாத்தியாரும் மறந்துவிடுவார் என்று நினைத்தாய்?.... இரண்டாய் பிளவுபட்டுக் கிடக்கும் இந்த மதம் ஒன்றும் இணைந்திட உன் பெயர் வழி தேடுகிறது என்று

## அழிக்கும் சக்திக்குள் இத்தனை ஆக்கப்பணிகளா!

உலகில் யுத்த தளவாடங்களுக்காக ஒவ்வொரு நாளும் 30 லிருந்து 40 லட்சம் டாலர்கள் செலவிடப்படுகிறது. ஒரு எப். 14 போர் விமானத்தில் விரயமாகும் செலவில் 9 பள்ளிக் கூடங்கள் கட்டலாம். அணுசக்தியால் இயங்கும் ஒரு நீர் மூழ்கிக் கப்பலுக்காகும் செலவில் 1 கோடி 60 லட்சம் குழந்தைகளைப் படிக்க வைக்கலாம். கண்டம் விட்டு கண்டம் பாயும் ஒரு ஏவுகணை ஆயுதத்திற்கு ஆகும் செலவில் ஐந்து மருத்துவமனைகள் கட்டலாம்!

-சிவகிருஷ்ணா.



எத்தனை முறை உன்னைப் பற்றி வகுப்பிலே கூறியிருக்கிறேன்... நினைவிருக்கிறதா?..."

"இருக்கிறது சார்!" — நெகிழ்ந்து விட்டான் சிவராமன். "வகுப்பிலே முதல் மாணவனாய் நான் வந்தபோது உங்கள் சொந்தக் காசில் எனக்குப் பேனாவும் புத்தகமும் வாங்கிக் கொடுத்து ஊக்கம் தந்ததையோ, பள்ளி இறுதித் தேர்வுக்குப் பணம் கட்ட வக்கில்லாமல் நான் விழித்தபோது நீங்கள் பீஸ் கட்டி ஆதரித்ததையோ நான் மறக்க முடியுமா சார்?... நான் இன்றைக்கு ஒரு கௌரவமான நிலையில் இருப்பதற்கே நீங்கள்தான் சார் காரணம்..."— தழுதழுத்த குரலில் நன்றி உணர்வு பிரவகிக்கின்றது. "உட்காருங்க சார்!"

நடராஜன் அமர்ந்ததும் தானும் அமர்ந்து கொண்ட சிவராமன், அருகிலிருந்த போலீஸ்காரனை விளித்தான். "யோவ், த்ரீ நாட் ஒன்! சாராயம் காய்ச்சுகிறவனைப் பிடிச்சுவர வேறொடு போய், குத்தவாளிங்களை விட்டுட்டு என்னோட பழைய டீச்சரையே புடிச்சு வந்திருக்கீங்களே என்னய்யா இதெல்லாம்?....." என்று சினத் தீயுடன் அவன் இரைய, இரையைக் கோட்டை விட்ட நரியாய் அந்தக் கான்ஸ்டபிள் அசடு வழிந்து தயக்கத்துடன் நடராஜனைப் பார்த்தான். 'என்னடா இது வம்பு?... அரை ஊரகக் கிழவன்னு புடிக்க அது 'அய்யா'வோட வாத்தியார் ஆயிட்டுதே!'

"வந்து சார்.... அவரேதான் சார்... வந்து சார்...." என்று அவன் தலையைச் சொறியவிடவும் நடராஜன் இடைமறித்தார். "தப்பு அவங்க மேலே இல்லே சிவராமன்... நானேதான் வாலண்டரியா ஸ்டேஷனுக்கு வந்தேன்..."

வியப்புத் தெறிக்கும் விழி வீச்சொன்றை அவர் மேலே லயிக்க விட்ட சிவராமன், "ஏன் சார்?...." என்று இழுத்தான்—விளங்கிக்கொள்ள இயலாதவனாய்.

நீண்டதொரு பெருமூச்சு நடராஜனின் நாசியினின்றும் கனத்துக் கிடந்த சோகச் சுமைகளுடன் வெளிப்பட்டது. "குற்றம் புரிந்தவன் தண்டனையை அனுபவித்துத்தானே ஆகணும்?...."

"குற்றமா?.... தாங்களா?...." வியப்பு சிவராமனின் விழிப்படலத்தில் மேலும் வியாபித்தது.

"ஆமாம் சிவராமன், ஒரு டாக்டர் கிட்டப் போன நோயாளி குணமாகாம இறந்து போய்ட்டா டாக்டரைக் குறை சொல்றோம். ஒரு வாதியோட கேஸ் தோத்துப் போயிட்டா வழக்காடிய வக்கீலைக் குறை சொல்றோம். அதே மாதிரி ஒரு மாணவன் வாழ்க்கையில் சரியான பாதையைத் தேர்ந்தெடுக்கலேன்னு அவனுக்கு அறிவையும் ஒழுக்கத்தையும் போதித்த உபாத்தியாரைத்தானே பொறுப்பாக்கணும்? அந்த வகையிலே பார்த்தா எங்கிட்ட படிச்ச துரைசாமி உனக்குக் கூடத் தெரியுமே, உன் கிளாஸ் மேட்தானே? — இன்னைக்குச் சாராய வியாபாரியா இருக்கான். அவனுக்கு அரிச்சுவடி போதிச்சவன்தான் நான். வாழ்க்கைக்கு வேண்டிய அறிவூட்டும் பணியை நழுவ விட்டு விட்டேனோ என்று நினைக்கிறேன்.



## ஒரு நாடோடிக் கதை

முன் காலத்தில் ஆகாயம் ரொம்பத் தணிவாக இருந்தது. மனிதர்கள் நடமாடக்கூட முடியாத அளவு கிட்டத்தில் இருந்தது. எல்லோரும் குனிந்து கொண்டும் தவழ்ந்து கொண்டும் தான் திரிந்தார்கள்.

அப்படி இருக்கும் போது ஒருநாள் ஒரு கிழவி வாசலைப் பெருக்கிக் கொண்டிருந்தாள். குனிந்து பெருக்கியதால் இடுப்பு கடுகடுத்தது. நிமிர்ந்தாள்! ஆகாயம் 'டொக்'கென்று தலையில் இடித்தது பலமாக.

கிழவிக்குக் கோபம் சண்டாளமாக வந்தது. கையில் இருந்த விளக்குமாற்றால் ஆகாயத்தை நாலு போடு போட்டாள்.

விளக்குமாற்றுப் பூசை வாங்கிய ஆகாயத்துக்கு ரோஷம் பொத்துக்கொண்டு வந்தது. கோபித்துக் கொண்டு யாருக்கும் எட்டாத உயரத்திற்குப் போய்விட்டது.

போனது சும்மா போகக் கூடாதோ? கிழவியையும் சேர்த்து இழுத்துக் கொண்டு போய்விட்டது. கிழவி அங்கே போய்த் தனக்கு ஒரு வீடு கட்டிக் கொண்டாள்.

அந்த வீடு தான் நிலா. அந்த நிலா வீட்டிலிருந்து கிழவி தான் வாழ்ந்த பூமியைக் குனிந்து எட்டிப் பார்த்துக் கொண்டே இருக்கிறாள். இப்போதும், நிலவை உற்றுப் பாருங்கள், உங்களுக்கும் தெரியும் அது!

—'தமிழ்நாட்டுச் சிறுவர் நாடோடிக் கதைகள்' என்ற நூலிலிருந்து
—டாக்டர் இரா. மோகன்

அதனால்தான் போலீஸ் அவனைத் தேடி வந்தபோது, என்னிடமே 'சரக்கு வேணுமா?'ன்னு கேட்கும் துர்ப்பாக்கிய நிலையிலிருந்த அவன் தப்பிச்சுட்டான். இந்தச் சமுதாயத்திலே அவனைக் குற்றவாளியாய் ஆக்காமல் செய்திருக்க வேண்டிய கடமையிலிருந்து தவறிய அவனது வாத்தியார் என்ற முறையிலே குற்றவாளியாகி நானே இங்கே வந்தேன்..."

சிவராமன் வியப்பின் சிகரத்துக்கே போய் விட்டான்.

சாட்டப்பட்ட குற்றத்திலிருந்து தப்பித்துக்கொள்ள அவனவன் பகீரதப் பிரயத்தனம் செய்வதைத்தான் அவன் கண்டிருக்கிறான். ஆனால், யாருமே நினைக்க முடியாத ஒன்றைத் தானே நினைத்துக் கொண்டு, தனக்குத் தானே குற்றம் சாட்டிக் கொண்டு, குற்ற உணர்வுகளைத் தானே இழுத்துப் போர்த்திக் கொண்டு, தானே ஸ்டேஷனுக்கு வந்து தானே தனக்குத் தண்டனை கொடுக்கக் கோரி....ஓ.... இந்த மனிதர் எந்த நூற்றாண்டிலே பிறந்திருக்க வேண்டியவர்?... தப்பிப்போய் இப்போது வந்து....

"சார், துரைசாமி உங்களிடம் சில காலமே மாணவனாயிருந்து பின்பு படிப்

யையே விட்டு நின்று விட்டான். ஆகவே, அவனை மறந்துவிட்டு வீட்டுக்குப் போங்கள் சார்!.... நான் ஏற்பாடு பண்றேன்'' என்றான் சிவராமன்.

நடராஜன் முகத்தில் அதிருப்தி தாண்டவமாடியது. ''நான் இப்போது வீட்டுக்குப் போகக் கூடாது சிவராமன். துரைசாமி இப்போது இங்கே வருவான். அப்புறம் பார்க்கலாம்....''

''என்ன சார் சொல்கிறீர்கள்? துரைசாமியாவது இங்கே வருவதாவது?...''

''இல்லை, சிவராமன். எனக்கு நம்பிக்கை இருக்கிறது. துரைசாமியும் மனிதன் தானே? என்னைப் போலீஸ்காரர்கள் பிடித்து வந்தது இந்நேரம் அவனுக்குத் தெரிந்திருக்கும். மனச்சாட்சியின் உறுத்தல் தாளாமல் அவன் இங்கே வருவான். நீ வேண்டுமானால் பார்... மனிதப் பண்புகள் இன்னும் அழிந்துவிடவில்லை சிவராமன்!'' — நடராஜன் உறுதியான குரலில் சொன்னது பொய்க்கவில்லை.

சிறிது நேரத்தில் துரைசாமி போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்தான் — அவனாகவே.

இரவு எட்டரை மணி.

அந்தப் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து நடராஜன் விடை பெறுவதற்காக இருக்கையை விட்டு எழுந்தார்.

லாக்கப்பினுள் ஏதோ தீவிர சிந்தனையில் ஆழ்ந்திருந்த துரைசாமியின் அருகில் சென்று, ''துரைசாமி! நான் வரட்டுமா?'' என்றார்.

கலைந்த கிராப்பைக் கையால் தள்ளி விட்டுக் கொண்டு துரைசாமி எழுந்து வந்து, லாக்கப் கம்பிகளினூடே கையை நுழைத்து நடராஜனின் கைகளைப் பற்றிக் கொண்டான்.

''சார்! சின்ன வயசில் நான் கலர்த் தண்ணியை வித்துக் காசாக்கினதை நீங்கள் கண்டிச்சபோது எங்கப்பன் தலையிடாம இருந்திருந்தா ஒருவேளை நானும் சிவராமன் மாதிரி நல்ல நிலைக்கு வந்திருப்பேனோ என்னவோ? அப்போ உங்களைப் பார்த்தா சிம்ம சொப்பனமா நினைச்சேன். அதனாலேதான் சீரழிஞ்சேன். ஆனா உங்க மேலே இருந்த மதிப்பும் மரியாதையும் மாறலேன்னு இன்னிக்குத் தான் தெரிஞ்சது.

''சாயந்திரம் உங்களிடமே 'சரக்கு வேணுமா'ன்னு கேட்டபோது நான் நெருப்பு மேலே நிக்கற மாதிரி இருந்தது. அதன் பிறகு ஸ்டேஷனுக்கு உங்களை இஸ்த்துக்கினு வந்துட்டாங்கன்னு நம்ப பசங்க வந்து சொன்னப்போ நான் பதறிப் போனேன். உங்களை எப்படியும் ரிலீஸ் பண்ணிடணும்னு 'பெரிய ஆள்' ஒருத்தரைப் புடிச்சிக்கிட்டுத் தான் ஸ்டேஷனுக்கு வந்தேன். ஆனா, நான் குத்தத்தை ஒப்புக்கிட்டாத்தான் நீங்க வெளியே போவீங்கன்னு பிடிவாதம் புடிச்சதும், 'சரி, இவருக்காக இந்தத் தடவை மட்டும் லாக்கப்பிலே இருந்துக்கலாம்'னு நினைச்சேன். ஆனா நீங்க போட்ட பெரிய கண்டிஷன் எனக்குப் பெரிய சவாலா விடுச்சு. உங்க மேலே எனக்கு உண்மையிலேயே மதிப்பும் மரியாதையும் இருந்தா இந்தச் சாராயத் தொழிலையே கம்ப்ளீட்டா விடச் சொல்லிட்டீங்க.... எனக்கு இது கொஞ்சம் கஷ்டமான வேலைதான். சாராய சாம்ராஜ்யத்திலே நான் சக்கரவர்த்தியாயிருக்கேன். அந்தப் பதவியை விட்டுவிடவும், என் வயித்துப் பிழைப்புக்கு ஏதாவது வழி தேடிக் கொள்ளவும் கொஞ்சம் அவகாசம் கொடுங்க.....''

உள்ளத்தில் வெகுநாளாய் உறங்கிக்கொண்டிருந்த உண்மையெல்லாம் உருப்பெற்று, வார்த்தைகளாய் வடிவெடுத்துத் துரைசாமியிடமிருந்து வெளிப்பட்டன.

நடராஜன் லேசாய்க் கலங்கி விட்டார். ''துரைசாமி! நான் காந்தியடிகளின் சத்தியாக்கிரகத்தில் இன்னமும் நம்பிக்கை வச்சிருக்கேன். இந்தத் தொழிலை விட்டுடறது அவ்வளவு ஒண்ணும் லேசான காரியம் இல்லேன்னு எனக்கும் தெரியும். இந்த லாக்கப்பிலே இருந்து ரிலீசாகி வெளியேறியதும் ஒரு மாசம் டயம் எடுத்துக்கோ... அதுக்குள்ள இந்தத் தொழிலை அறவே ஒழிச்சுட்டு வேறே தொழில் தேடிக்கோ... அடுத்த தடவை நான் உன்னைப் பார்க்கும்போது நீ வெறகு பொளந்து கஷ்டப்பட்டுக்கிட்டிருந்தாக்கூட 'அதோ வியர்வை வழிய வெறகு பொளக்கிறானே அவன் என்னோட பழைய ஸ்டூடண்ட்!' அப்படீன்னு பெருமையாச் சொல்லிப்பேன்.... இந்த சனித் தொழில் உன்னோடு போகட்டும். உன் குழந்தைகள் இதிலே சடுபடாமப் பார்த்துக்க... நான் வர்றேன் துரைசாமி!''

துரைசாமியிடமிருந்து விடைபெற்றுச் சிவராமனிடம் வந்தார் நடராஜன்.

சட்டத்தினால் தண்டிக்க முடியுமே தவிர திருத்த முடியாது. மெல்லிய மனித உணர்வுகளைத் தூண்டிச் சட்டம் செய்ய முடியாத ஒரு செயலைத் தம் வைராக்கியத்தால் செய்து முடித்துத் தம் எதிரிலேயே ஒரு சமுதாயக் கொடுமையை — சமுதாயத்துக்கு ஊறு விளைவித்துக் கொண்டிருந்த ஒரு சமூகத் தீமையை —வேரோடு ஒழித்துவிட்ட தம் பழைய ஆசிரியரைப் பெருமை பொங்கப் பார்த்தான் சிவராமன்.

அவர் கைகுலுக்கி விடை பெறும்போது 'இந்த மெலிந்த கைகளையுடையவருக்கு எத்தனை உறுதியான, இன்மை மனம்!' என்று வியந்தான்.

'இந்த நாட்டில் இன்னும் எத்தனை 'துரைசாமி'களுக்கு எத்தனை 'நடராஜன்'கள் தேவையோ?' — பெருமூச்செறிந்தான் சிவராமன்.



# டாக்டர் அண்ட்ரி சகரோவ்

# இரும்புக் கூண்டில் ஒரு வெள்ளைப் புறா!

1975ம் ஆண்டுக்கான நோபல் சமாதானப் பரிசு பெற்றவர், சோவியத் ரஷ்யாவின் தலைசிறந்த விஞ்ஞானிகளில் ஒருவர், 58 வயது நிரம்பிய டாக்டர் அண்ட்ரி சகரோவ் (Andrei Sakharov). அவருக்கு இதுவரை சோவியத் அரசு அளித்துள்ள பதவிகள், விருதுகள் ஆகியவற்றை அந்த அரசே பறித்துவிட்டது. அத்துடன் அவர் ருஷ்ய நாட்டுக்குள்ளேயே பிரஷ்டம் செய்யப்பட்டுள்ளார். சிறைக்கு அனுப்புவதற்கு மறு பெயர்தான் இது!

ஆப்கானிஸ்தானத்தில் சோவியத் அரசு ராணுவ ஆக்கிரமிப்புச் செய்துள்ளதை எதிர்த்து டாக்டர் சகரோவ் குரல் எழுப்பியதே சோவியத் அரசின் கோபம் உச்சகட்டத்தை அடையக் காரணம்.

டாக்டர் சகரோவைப் பற்றி:

- பௌதிகத் துறையில் மிகச் சிறந்த விஞ்ஞானி. சோவியத் நாட்டில் ஹைட்ரஜன் குண்டு தயாரிப்பதில் தலையாய பங்கு வகித்தவர்.
- எனினும் அணு ஆயுதத் தயாரிப்பு உலக நாசத்தையே உண்டாக்கும்; அணு சக்தி ஆக்க ரீதியிலேயே பயன்படுத்தப் பட வேண்டும் என்று அறைகூவல் விடுத்தவர்.
- 1965ம் ஆண்டுக்குப் பிறகு அணு ஆயுத உற்பத்தி ஆராய்ச்சியைத் தொடர இவர் மறுத்துவிட்டார்.
- உலகப் போரின்போது ராணுவத்தில் பணியாற்ற வேண்டிய கட்டாயத்தினின்று விலக்கு அளிக்கப்பட்டார். சோவியத் நாட்டில் இம்மாதிரி விலக்கு அளிக்கப்படுவது மிகவும் அரிது. இவரது அபார ஆற்றல் போர் முனையில் பலியாகி விடக் கூடாது என்ற எண்ணமே காரணம்.
- டாக்டர் விருது நமக்கு இங்கு சர்வ சாதாரணமாகிவிட்டது. சோவியத் நாட்டில் அதைப் பெறுவது அரிதினும் அரிது. சகரோவுக்கு 26 வயதிலேயே டாக்டர். பட்டம் வழங்கப்பட்டது.
- 'சோவியத் அகாதமி ஆஃப் சயன்ஸ்' என்ற அமைப்பில் அங்கத்தினராகும் உயர் கௌரவமும் சகரோவுக்குக் கிட்டியது.
- சோவியத் அரசின் கொள்கைகளுக்கு எதிராகத் தைரியமாகக் குரல் எழுப்பிய சோவியத் அறிஞர்கள் மிகச் சிலரில் டாக்டர் சகரோவ் முக்கியமானவர்.
- மனித சமுதாயம் பிளவுபட்டிருப்பதால் நஷ்டம் மனித சமுதாயத்துக்குத்தான் என்றும் அறிவுபூர்வமான அபிப்பிராய சுதந்திரம் மனித சமுதாயத்துக்கு இன்றியமையாதது என்றும் தமது நாட்டில் தைரியமாகப் பிரகடனப்படுத்தி அரசின் அதிருப்தியைச் சம்பாதித்துக் கொண்டவர்.
- சமூகமான ஓர் உலக அரசு ஏற்பட வேண்டும் என்பது டாக்டர் சகரோவின் லட்சியக் கனவு.
- முதலாளித்துவம் தனக்குள் கொண்ட முரண்பாடுகளினால் வீழ்ச்சியடையும் எனும் மார்க்ஸிய அனுமானத்தைக் கடுமையாக விமர்சித்ததோடு ஜனநாயக நாடுகளில் உள்ள முதலாளித்துவமும், சோவியத் பாணி சோஷலிஸமும் ஒன்றிலுள்ள நல்ல அம்சங்களை மற்றது எடுத்துக் கொண்டு ஒன்றை ஒன்று நெருங்கி வந்து ஒப்புரவுடன் செயலாற்றக் கூடும் என்ற தமது கணிப்பை சகரோவ் தெரிவித்தார். இதுவும் ருஷ்ய அரசுக்குப் பிடிக்கவில்லைதான்.



- சோவியத் நாட்டில் மனித உரிமைக்குப் பாடுபடுவதற்காக அரசு கலப்பற்ற ஓர் அமைப்பை வேறு சில விஞ்ஞானிகளுடன் இணைந்து 1970ல் டாக்டர் சகரோவ் தோற்றுவித்தார். கேட்க வேண்டுமா? அரசின் வெறுப்பை ஏராளமாகச் சம்பாதித்துக் கொண்டார்.
- அரசின் கொள்கைகளை எதிர்த்து விமர்சனம் செய்யும் மேதைகளை மனோதத்துவ மருத்துவ மனைகளிலும், ஏகாந்த இடங்களிலும் சிறை வைப்பது சோவியத் அரசின் வழக்கம். இம்மாதிரி தண்டனைக்குள்ளான சில மேதைகளை விடுவிக்க அரசிடம் வாதாடும் தைரியம் சகரோவுக்கு இருந்ததுண்டு.
- சோவியத் அரசின் கோபம் படிப்படியாக உயர்ந்து தற்போது டாக்டர் சகரோவே சோவியத் அரசால் சிறை வைக்கப்பட்டுள்ளார். அவரை விடுவிக்குமாறு சுதந்திரத்தில் பற்றுள்ள உலக மக்கள் அனைவருமே கோருகின்றனர்.

**பி. ரங்கநாயகி**

# ஒற்றன் 4X-1

சித்திரக்கதை: புஜ்ஜாய்



























## சிரிப்பு இல்லாத ஜோக்குகள்

"திரையே இன்னும் அமைக்கலியே, அப்புறம் எப்படி இந்தத் தியேட்டரில் படம் ஓடுதுங்கறே...?"

"இந்தத் தியேட்டரில் ஓடறது 'கவர் இல்லாத சித்திரங்'களாச்சே...!"



"'கவர் இல்லாத சித்திரங்கள்' மாதிரி நானும் ஒரு படம் எடுக்கப் போறேன்."

"படத்துக்கு என்ன பெயர் வைக்கப் போறே...?"

"கவர் இல்லாத போண்டா பீஸ்கள்...!"



























நண்பர்: ''உங்க படத்திற்கு அடிச்ச போஸ்டர்களை ஏன் இன்னும் ஒட்டலே..?''

தயாரிப்பாளர்: ஒட்டறதுக்குக் காலிச் சுவர் கிடைக்கலே...''

நண்பர்: ''சரிதான். 'சுவர் இல்லாத போஸ்டர்கள்...!' ''



தியேட்டர் அதிபர்: ''பஸ்ஸில் சினிமாவைக் காட்டி எங்க பொழப்பைக் கெடுக்கறீங்களே...''

பஸ் அதிபர்: ''நீங்க தியேட்டரில் பஸ் ஓட்டுங்களேன்! யார் வேண்டாம்னுங்க..?''

-வைத்துக்கடவு ரவி



# பேராசிரியர்

## மீ.ப.சோமு

இனிமையும் அதிகாரமும் இணைந்தவராக விளங்கிய ஒரு பேராசிரியர் அவர். மாணவர்களோடு சரிசமானமாக ஒரு நண்பரைப் போலவே பழகுவார். என்றாலும் அவர் தன் வணக்கத்துக்குரிய ஆசிரியர், தான் அவருடைய மாணவன் என்று ஒவ்வொரு மாணவனும் எப்போதும் எண்ணிக் கொண்டிருக்கும்படி ஒரு பக்தி உணர்ச்சி நிலையாக இருக்கும்! ஏனென்றால், மாணவர்கள் அஞ்சியது அவருடைய கைப்பிரம்புக்கு இல்லை; அவருடைய அறிவாற்றலுக்கு. மாணவர்கள் மதித்தது அவருடைய அதிகாரத்தை இல்லை, அவருடைய திறமையை, அவருடைய படிப்பை, அவருடைய மதி நுட்பத்தை! அவர்தான் பேராசிரியர் அ. சீனிவாசராகவன் அவர்கள்!

பேராசிரியரை நான் முதன் முதலாகச் சந்தித்தது மிகச் சிறு பையனாக இருந்தபோது. நெல்லை ஹிந்து கல்லூரியின் உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தேன். எங்கள் ''குட்டைக்கரை வீட்டின்'' மாடியில் ஒரு பகுதியில் சில அறைகளில் கல்லூரி மாணவர்கள் வாடகைக்கு இருந்தார்கள். மாதந்தோறும் வாடகை வாங்குவதற்காக நான் போவேன். அப்போதுதான் அவரை நான் பார்த்தேன்.

இசைக் கலைஞர் வி. வி. சடகோபன், அவருடைய சக மாணவர்கள் ராஜமன்னார், அநந்தகிருஷ்ணன், நெல்லை வழக்கறிஞர் கஸ்தூரி, சட்ட மன்ற முன்னாள் தலைவர் செல்லபாண்டியன் முதலானோர் மாணவர்களாக இருந்தபோது எங்கள் அறைகளில் குடியிருந்தார்கள். அங்கே அடிக்கடி வந்து போவார் சீனிவாசராகவன். முக்கியமாக, சடகோபன் அறைக்கு அடிக்கடி வருவார்.



''என்னைத் தெரியுமா உனக்கு?'' என்று கேட்டார் புருவங்களை உயர்த்திக்கொண்டே!

''தெரியுமே! நீங்கள் தான் இங்கிலீஷ் சீனிவாசராகவன்!'' என்றேன், சிறுபையன்!

''இங்கிலீஷ் சீனிவாசராகவன் என்றால்?''

''இங்கிலீஷ் ஆசிரியர், காலேஜில்!''

''அப்படியானால் எனக்குத் தமிழ் தெரியாது என்கிறாயா?'' என்று குறும்புத்தனமாகக் கேட்டார் சீனிவாசராகவன்.

''நீங்கள் தமிழில் பேசிக் கேட்டதில்லை. கல்லூரி விழாவில் ஆங்கிலத்திலே பேசியதைத்தான் கேட்டிருக்கிறேன்!'' என்றேன்.

''இப்போது உன்னுடன் தமிழில்தானே பேசுகிறேன்!'' என்றார் பேராசிரியர்.

இப்படி ஆரம்பித்தது அந்தச் சந்திப்பு! பிறகு நான் கல்லூரிக்குப் போனதும் அவர் எங்கள் ஆங்கிலப் பேராசிரியர் ஆனார். அதோடு நான் மாணவனாக இருந்தபோதே கல்வி அவர்கள் கொடுத்த ஊக்கத்தில் அடிக்கடி விகடனுக்கு எழுதி வந்ததை மிகவும் உற்சாகப்படுத்தினார் சீனிவாசராகவன்!

எப்பேர்ப்பட்ட ஆசிரியர்! அவர் நடத்திய வகுப்புக்கள் எத்தனை கலகலப்பாக இருக்கும்! அடடா! கலகலப்பு என்றால் மாணவர்கள் செய்கிற சச்சரவுகள் இல்லை! வகுப்பு முழுதும் ஒரே இலக்கியக் கலகலப்பாக இருக்கும்! ஒரு பையன் அங்கு இங்கு அசைய மாட்டான். ஆத்மாவையே இழுத்துவிடும் அவருடைய கல்வி!

இன்று சீனிவாசராகவனை என் ஆங்கில ஆசிரியர் என்று மட்டும்தானா நினைக்கிறேன்? இல்லை. ஏதோ ஒரு ஜன்மாந்தர வாசனையினால் சில ஆண்டுகள் மிகவும் நெருங்கி இணைந்திருந்த ஓர் அரிய உறவாகவே அதை இன்றைக்கும் மதித்து வணங்குகிறேன்.

ஆம், சிறு வயதில் தந்தையை இழந்து, நீதிமன்ற வழக்குகளில் எங்கள் சொத்துக்கள் சிக்கித் தவித்த காலத்தில் எனக்கு ஒரு பெரிய பக்க பலமாகவும் ஆசானாகவும் அவர் விளங்கினார். ஒரு மாணவனிடம் அத்தனை அன்பு அவருக்கு!

ஆங்கிலம் தமிழ் இரண்டிலும் நல்ல செறிவோடு சொற்களைக் கையாள்கிற ஆற்றல்! கவிதை, வசனம் இரண்டிலுமே அவருக்கு என்று ஒரு தனித் தன்மை. ஆங்கில மொழியின் சுகத்தைத் தமிழிலே ஏற்றி எழுதுகிற ஓர் இங்கிதம். பேச்சிலும் எழுத்திலும் ஒரு திருத்தம். எது பேசினாலும் எழுதினாலும் அதில் ஒரு தொடக்கம், ஒரு நடுவு, ஒரு முடிவு என்ற வரையறை. சொல்லின் கலை கல்லின் கலையாகவே பரிணமித்துச் சிற்பத்தைச் செதுக்கி நிறுத்தியது போல் இருக்கும் அவருடைய மொழியாற்றல்!

சாகித்திய அகாதமிப் பரிசு பெற்ற கவிஞர், பல வசன நூல்கள் எழுதியுள்ள அறிஞர், சிறந்த பேச்சாளர், எழுத்தாளர், நெல்லையிலும்

**நீங்காத நினைவு**

சென்னையிலும் ஆங்கிலப் பேராசிரியராக இருந்ததோடு தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரியின் முதல்வராகவும் அது நிலை நிற்பதற்கு ஒரு தூணாகவும் விளங்கியவர். இதெல்லாம் நாடறிந்த செய்தி. ஆனால் அவர் ஒரு வயலின் வித்துவான் என்பது பலருக்குத் தெரியாது!

ஒரு நாள் வேடிக்கையாக அவர் வீட்டில் கைலாசபுரத்தில் வயலின் வாசித்துக் கொண்டிருந்தார். சில சமயங்களில் நான் பாடுவதுண்டு. அன்று அவர் என்னை அவருக்குப் பக்கவாத்தியமாக ஹார்மோனியம் வாசிக்கச் சொன்னார். சென்னையிலிருந்து எழுத்தாளர் தி.ஜ.ர.வும் வேறு சில நண்பர்களும் திடீரென்று வந்து விட்டார்கள்! கச்சேரி அமர்க்களமாகத் தொடர்ந்தது! நீண்ட நேரத்துக்குப் பிறகு அவர்கள் சென்ற பின் என்னிடம் பேராசிரியர் சொன்னார்:

''இங்கிலீஷை விட்டு விட்டு இந்த இங்கிலீஷ்காரன் வாத்தியத்தை, வயலினையே தொழிலாகக் கொண்டிருக்கலாம்!''

இந்த வார்த்தைகளைப் பிற்காலத்தில் பல முறைகள் நான் நினைத்துப் பார்த்ததுண்டு. அவருடைய ஆற்றல்களுக்கு அவரை எப்படி எப்படியெல்லாமோ நாடு பயன்படுத்திக் கொண்டிருக்கலாம் என்ற எண்ணமே நிலையாக நிற்கிறது. ஆனால் அவர் சம்பந்தப்பட்ட வரை அவருக்கு ஒரு பெரிய ஆசை இருந்தது.

நம்மாழ்வார் பரம்பரையில் வந்தவரும், என் உறவினர்களில் ''நாமதாரி''கள் என்று அழைக்கப்படும் ஆழ்வார்திருநகரிக் குடும்பத்தைச் சேர்ந்தவருமான ஒருவரிடம் பேராசிரியர் தமது கடைசி ஆசை ஒன்றை வெளியிட்டார்:

''நம்மாழ்வாரைப் பற்றி இந்தக் காலத்து மக்களுக்குப் புரிகிற முறையில் ஒரு 'மாடர்ன் ஒர்க்' செய்துவிட வேண்டும்!''

அவருடைய இந்த ஆசை நிறைவேறிவிட்டது. அந்த நூலின் அச்சுத் தாள்கள் பலவற்றைக் கூட அவரே பார்த்தார். ஆனால் நூல் வெளியாகும்போது அவர் நம்மாழ்வாரிடமே சென்றுவிட்டார். அந்த நூல் தான் சாகித்திய அகாதமியார் வெளியிட்டுள்ள ''நம்மாழ்வார்'' என்ற அருமையான ஆங்கில நூல்.!

# பிறந்த நாள் பிறப்புரிமை அல்ல!

● அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் வி. சுப்ரமணிய நாடார் துணைவேந்தராயிருந்த சமயம். விடுதியில் நடைபெற்ற ஒரு சச்சரவில் அங்கிருந்த ஒரு டியூப் லைட்டை யாரோ ஒரு மாணவர் உடைத்து விட்டார். யாரென்று கண்டுபிடிக்க முடியாமல் வார்டன் இச்சம்பவத்தைத் துணைவேந்தர் வரை கொண்டுவந்தார். அவர் மாணவர்களிடம் சொன்னார்: ''நீங்கள் உங்களுடைய சகாவைக் காப்பாற்ற மௌனம் சாதிக்கிறீர்கள். நான் நம்முடைய பல்கலைக் கழகத்துக்கு நஷ்டம் ஏற்படுவதைத் தவிர்க்க விரும்புகிறேன். இப்படிக் கூறிவிட்டு விடுதியின் வாசலில் உண்டியல் மாதிரி ஒரு பெட்டியை வைத்து, ஹாஸ்டலில் உள்ள எல்லா மாணவர்களும் அதில் ஐந்து அல்லது பத்துப் பைசா போட வேண்டும் என்று கூறி, டியூப் லைட்டின் விலையை யாருக்கும் எந்த மனக் கசப்புமின்றி வாங்கிவிட்டார்.

எஸ். ராமதாஸ்



''அந்தப் பத்திரிகை ஆசிரியர் கிட்டேபோய், ''உங்க பத்திரிகையிலே நான் 'விட்' எழுதட்டுமா சார்?''ன்னு கேட்டேன்....''

''அவர் என்ன சொன்னார்?''

'' 'WIT'டுக் கொடுக்காமல் பேசி அனுப்பிட்டார்''

—எஸ். சங்கர நாராயணன்

● ● ●

பிப்ரவரி மாதம் 29ம் தேதி (லீப் ஆண்டு) பிறந்தவர்களுக்கு நான்கு வருடங்களுக்கு ஒரு முறைதான் பிறந்தநாள் வருகிறது. ஆனால் 2000'ம் வருடத்தில் பிப்ரவரி மாதத்துக்கு முப்பது நாட்களாம்! அன்று பிறந்தவர்கள் பிறந்த நாளே கொண்டாட முடியாது!

ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் பிப்ரவரி மாதத்திற்கு 30 நாட்கள் வருமாம்!

—''லைஃப் டைம் ஸ்பீக்கர் என்ஸைக்ளோபீடியாவிலிருந்து —கோவி. பரஞ்சோதி



# ஸத்ய ஸாயி ஞானமுதம்

“நாகு மோக்ஷம் காவாலி — எனக்கு மோக்ஷம் வேண்டும்” என்று கேட்கிறார்கள். முதலில் சொன்ன 'நாகு' — நான் என்கிற அஹங்கார முனைப்பு — போக வேண்டும். முடிவில் வரும் 'காவாலி' — வேண்டும் — என்கிற ஆசையும் போக வேண்டும். அஹங்காரமும் ஆசையும் போய்விட்டால் மோக்ஷம் நடுவில் தானே விளக்கமுற்று நிற்கிறது! இப்போதே இருப்பதுதான் அது! பார்ஸலின் மேல் காகிதத்தை முன்னும் பின்னும் கிழித்துவிட்டால் வஸ்து மட்டும் கையில் நிற்பது போல, 'நாகு மோக்ஷம் காவாலி'யில் 'நாகு' 'காவாலி' இரண்டையும் கிழித்துவிட்டால் மோக்ஷம் கைவசம் இருக்கிறது.

ஆசைகளைத் தவிர மனம் என்ற ஒன்றே இல்லை. ஒரு துணியிலிருந்து இழை இழையாக உருவி எடுத்துக் கொண்டே போனால், கடைசியில் என்ன மிஞ்சும்? இப்படியே ஒவ்வொரு இச்சையாக உருவி உருவி எடுத்துக்கொண்டே இருந்தால் மனம் என்றே ஒன்று இராது. ஆத்ம ஆகாசம் மட்டுமே நிற்கும்.

சரணாகதி, சரணாகதி என்று பெரிதாகச் சொல்லும்போது ஜீவனுக்கு அந்நியனான பகவான் என்ற ஒன்றிடம் ஜீவன் அர்ப்பணமாவதாக நினைப்பது அடியோடு தவறாகும். கீழான — மனம் எனும் — 'நான்' உண்மையான — ஆன்மா எனும் — 'நானி'டம் அற்றுப் போவதுதான் நிஜ சரணாகதி. அதாவது, ஆத்மா ஒன்றே உள்ளது என்ற ஞானம்தான் உண்மையான சரணாகதி.

விட்டு விலகு. திட்டம் போடுவதை விடு. மிக நல்ல உத்தேசத்தோடு திட்டம் போடுவதைக்கூடத்தான்! நீ போற்றிப் பேணும் அத்தனை ஸித்தாந்தங்களையும், பிரியமாகப் பிடித்துக் கொண்டிருக்கும் அவ்வளவு கொள்கைகளையும் மூளையில் நிரப்பிக் கொண்டிருக்கும் எல்லா அறிவுச் சேகரிப்புகளையும் விடு. புகழ், செல்வம், புலமை, மேன்மை இவற்றின் தேட்டத்தை விடு. இவை எல்லாமே மனத்தாலான வெளி விஷயங்கள்தாம். முதலில் ஆத்மாவைக் கண்டு கொள்வாய். பிறகு வெளி விஷயங்களில், வெளி உலகில் நுழை. அப்பொழுதுதான் இவை எல்லாவற்றையும் கூட அந்த ஆத்மனின் லீலையாகவே கண்டு மகிழ்வாய்.

அந்தந்த நொடியையும் வரவேற்று வாழ்வாயாக. அதற்கு முன் நொடியைப் பற்றிய சிந்தனை, அடுத்த நொடியைப் பற்றிய கவலை வேண்டாம். நினைப்பு, தீர்மானங்கள் ஆகியவற்றின் சுமையின்றி ஒவ்வொரு நொடியிலும் புதிதாக வாழ். 'முடிவானவை' என்று தீர்மானங்கள் செய்வது உன்னைக் கட்டிப் போட்டு மனத்தை நெரிப்பதாகும். தீர்மானத்துக்கு வராமல் இருக்கும் தீரத்தைக் கைக்கொள்க.

மனம் நிலையே இல்லாமல் தடுமாறுகிறதா? தடுமாறட்டும். சித்தத்தில் அமைதி இல்லை என்று கலங்குகிறாய். உண்மையில் அந்த அமைதியின்மையால் உனக்குக் கேடில்லை. தடுமாற்றம், அமைதியின்மை இவைதான் மனம், சித்தம் இவற்றின் இயல்பே! அந்த மனத்தை, சித்தத்தைத் 'தான்' ஆகப் பற்றிக் கலங்குவதுதான் தவறு. கலங்காமல் இந்தச் சலனங்களைக் கவனி. அமைதியின்மை இப்போது இருக்கிறதா? மனம் எங்கு வேண்டுமானாலும் ஓடட்டும் என்று விட்டு, ஓட்டத்தைக் கவனிக்க ஆரம்பி. ஓட்டமெல்லாம் நின்று போகும்; ஸ்திதப் பிரக்ஞன் ஆவாய். அப்படி இன்றி, மனத்தை இங்கேதான் போகலாம், அங்கே போகக் கூடாது என்றும் அது திமிறும்; குறுகிப் போகும். 'வேண்டும், வேண்டாம்' எனும்போது நீ வேண்டுவதன் மீது சார்ந்து நிற்கிறாய்; வேண்டாதவற்றை ஒதுக்கி வைக்கிறாய். ஒதுக்கி வைத்தது உன் மேல் வந்து விழுந்து சுமையாக நெரிக்கிறது. வேண்டாதது என்று எதுவுமே இன்றி நீ பரிபூரண விசாலமாகி விட்டால் எது எதன் மீது விழுந்து நெரிக்க முடியும்?

தொகுப்பு: ரா. கணபதி



# பூக்குழி

## லக்ஷ்மி

### 25

இந்தச் சில நாட்களில் அகல்யா பட்ட மன வேதனையைப் பெரும் சித்திரவதை என்றுதான் கூறவேண்டும்.

''வந்திருப்பவன் தன் கணவனில்லை—ஆள் மாறாட்டம் செய்கிற ஓர் அயோக்கியன்'' என்ற உண்மையை உணர்ந்து கொண்ட போது அவள் உள்ளம் பட்ட பாடு!

''அப்படியென்றால் அவள் கணவன் ராஜ்குமார் என்ன ஆனான்?'' என்று எண்ணி ஏங்கித் தவித்த தவிப்பு?

வந்திருப்பவன் தன் கணவனது தம்பி என்பதும் ராஜ்குமார் கடலில் மூழ்கி இறந்து போனதாக அவன் கொடுத்த தகவலும்—பத்திரிகைச் செய்தியும் அவளை எத்தனை பெரிய துயரத்தில் ஆழ்த்தி விட்டிருந்தன!

வெளியே சொல்லிக் கொள்ள முடியாது—விசாரித்து உண்மையை உடனடியாகக் கண்டு கொள்ளவும் இயலாத ஒரு பயங்கரமான அவல நிலையில் சிக்கிக் கொண்டிருந்த அகல்யாவின் உள்ளம் இத்தனை நாட்களும் ஊமையாகத் தனக்குள்ளே அழுது கொண்டிருந்தது. அந்த மாபெரும் வேதனையை அவள் எப்படித்தான் சகித்தாளோ? அவளுக்கே அது அதிசயமாகத்தானிருந்தது.

மாமியார் இறந்து விட்டாள் என்று மற்றவர்களுக்கெல்லாம் தெரிந்தவுடன் அவள் இதுவரை அடக்கி வைத்திருந்த துயரம் அனைத்தையும் கொட்டி அழுதாள். குமுறிக் குமுறி அழுதாள்.

காமேஷ் சொல்வதும் பத்திரிகைச் செய்தியும் உண்மையா?

ராஜ்குமார் உயிரோடு இருந்தால் இத்தனை நாள் ஊருக்கு வந்திருப்பாரே?...

முத்துமாரித் தாயே! தூய பக்தியுடன் உன்னை நெருங்க உன் நெருப்புப் பாவாடையில் தவழ்ந்து வந்த உன் குழந்தை நான்...

என் கணவரை நீர் கொண்டு போக விட்டு விட்டாயே தர்மமா?...

தனக்குள்ளே பலமுறை கேட்டுக்கொண்டு வாய் விட்டு ஓவென்று கத்தி அழுதாள்—தரை மீது புரண்டு விம்மிக் கண்ணீர் வடித்தாள்.

அவள் என்ன ஆதிமந்தியா? கடல் கொண்டு போன தன் காதலனைக் கதறி அழைத்ததும் கடல் கொண்டு வந்து கரையில் சேர்த்துவிட?

அற்புதங்கள் நிகழ்த்தும் வல்லமை படைத்த முத்துமாரியே அவள் விஷயத்தில் கல்லாக இருக்கும்போது அவள் கண்ணீருக்கு என்ன வலிமை இருக்கிறது?...

தனிமையில் அவளை இப்படித் தவிக்க விட்டதற்குப் பதில் பூக்குழியில் இறங்கிய அன்றே முத்துமாரி அவளைத் தீக்கிரையாக்கித் தன் பாதத்தில் ஏற்றுக் கொண்டிருக்கலாமே?

பலவும் எண்ணி நெஞ்சு வெடிக்கும்போல அவள் குமுறி அழுது கொண்டிருந்தாள். சிங்காரமும் பூரணியும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள்.

''பெரியம்மாவுக்கு வயசாயிடுச்சு. பல வித நோய்கள் வந்து படாத பாடு பட்டுக் கொண்டிருந்தாங்க. பார்வைக் கோளாறு வேறு. தனக்கும் பிறருக்கும் தொல்லை இல்லாமல் மாரடைப்பிலே அவங்க போகக் குறு போனது நிம்மதியான சாவுன்னு தான் நாம நினைக்கணும். அவங்க படுத்த படுக்கையோட இன்னும் ஊறி — நாறிச் செத்தாக்க நம்ம எல்லார் மனசும் வேதனைப் படுமே — அவங்க படற கஷ்டத்தைப் பார்த்து மகன் சகிக்க மாட்டாரே—துடிச்சுப் போவாரே? அதுவரை ஆத்தா நம்மேலே கிருபை வச்சு அம்மாவைத் தக்க சமயத்திலே தன்னோட ஐக்கியப்படுத்திக் கொண்டா... அழாதீங்க சின்னம்மா....'' பூரணி அருகில் வந்து உட்கார்ந்து கொண்டு மெல்லிய துண்டினால் எஜமானியின் கண்ணீரைத் துடைத்து ஆறுதல்கள் பல சொன்னாள்.

அகல்யா விடாது விசும்பி அழுது கொண்டுதான் இருந்தாள்.

''பாவம்! மாமியார் உயிருடன் இருந்த போது கட்டிக் காத்துப் பல பணிவிடைகள் செய்து உடல் சோர்ந்து போனது போதாது போல — இறந்து போனவங்களை நினைச்சு உருகி அழுது இப்படி இளைச்சுத் துரும்பாகப் போயிட்டாங்களே சின்னம்மா — இவங்களுக்குத்தான் எத்தனை ஒரு நல்ல மனசு?...'' தனக்குள் அவள் எண்ணி மிகவும் வியப்படைந்தாள்.

''அம்மா சூடா கொஞ்சம் காப்பி கொண்டு வந்திருக்கேன். ஒரு வாய் சாப்பிடுங்க...அன்னந் தண்ணி இல்லாமக் கிடந்தா உடம்பு என்னத்துக்காகும்?'' வற்புறுத்திச் சிறிது காப்பியை அவ்வப்பொழுது கொடுத்து உபசரித்தாள்.

அகல்யாவுக்கு உணவு கசந்தது — உறக்கம் ஒழிந்தது: துயரத்தில் ரத்தக் கண்ணீர் வடித்த உள்ளம் தன் புலம்பலை நிறுத்த மறுத்தது.

உயிருக்கு மேலான கணவன் போன பின்பு அவள் இனி வாழ்ந்துதான் என்ன பயன்? என்றதொரு நினைப்பு மனத்திலே நிறைந்து நின்றது.

பதினொருவது நாள் சடங்கிலே வந்து கலந்துகொள்ளச் சேலத்திலிருந்து பார்வதி வந்திருந்தாள். ஊருக்குத் திரும்பு முன் அகல்யா உட்கார்ந்திருந்த அறைக்குள்ளே வந்தாள். அவளது கரங்களை அன்புடன் பற்றிக் கொண்டாள்.

''எல்லாம் ஒழுங்கா நடந்தேறிடிச்சு. பஞ்சரத்தினம் புண்ணியம் பண்ணினவ. காசும் பணமுமா செல்வாக்காத்தான் வாழ்ந்தா. ராஜ்குமார் தங்கமான பிள்ளை. தான் தலையெடுத்த பிறகு தாயாரை உள்ளங் கையில் வச்சுத் தாங்கினான். வீட்டுக்கு வந்த மருமகள் நீ எல்லாரையும் மிஞ்சிட்டே. பெத்த தாயாட்டம் பஞ்சரத்தினத்தைக் கடைசி வரை வச்சு ஆசையும் அன்புமாக் கவனிச்சே: எல்லாம் அவ மனசுப்படியே செஞ்சு முடிச்சுட்டே. இந்த மாதிரி ஒரு பாக்கியம் எனக்குக் கிடைக்குமோ கிடைக்காதோ தெரியாது. என் தோழி கொடுத்து வச்சவ. உன்னைப் போல நல்லதொரு மருமகளை அடைஞ்சா.... மேன்மையாகப் போயிட்டா....நீ நல்லா இருக்கணும்—பூவும் பொட்டுமா மகராசியா வாழணும்னு வாழ்த்தறேன்: பஞ்சரத்தினம் எங்கேயும் போக மாட்டா: வெகு சீக்கிரம் இந்த வீட்டிலேயே ஒரு குழந்தையா வந்து பிறந்துடுவா. பின்னை, மருமகள் இரண்டு பேர் மேலேயும் அவளுக்கு உசிரு.'' பார்வதியின் குரல் தழுதழுத்தது: கலைந்து கிடந்த அகல்யாவின் நெற்றி முடியை மெல்ல ஒதுக்கி விட்டு அவளைக் கட்டித் தழுவிக் கொண்டாள்.

உண்மையை அவளிடம் சொல்ல முடியாது அகல்யா விசும்பி அழுதாள்.

''அழாதேம்மா... இனி நீ தைரியமா இருக்கணும். இந்த வீட்டைக் கவனிக்கிற முழுப் பொறுப்பும் இனி உன்னுடையதாயிடுச்சே. மனசைத் தளர விடலாமா? எழுந்து முகத்தைக் கழுவிக் கொண்டு ஏதாச்சும் சாப்



பிடு. தம்பி ராஜ்குமாரை நல்லாக் கவனிச்சுக்கோ'' என்று சொல்லிவிட்டுத் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு பெருமூச்சுடன் இளம்பினள்.

சடங்குக்கு வந்த யாவரும் புறப்பட்டுப் போய்விட்டனர். பொழுது அமிழும் வேளையில் அகல்யா முகத்தைக் கழுவி முடியை வேகமாகச் சீவி முடித்துக் கொண்டாள். குங்குமச் சிமிழைத் திறந்து விரலில் சிறிதளவு தொட்டு நெற்றி மீது வைத்துக் கொண்டபோது அவள் மேனி பயத்திலே நடுங்கியது.

கண்ணாடியில் தெரிந்த தன் உருவத்தைப் பார்க்கப் பிடிக்காது வேகமாகத் திரும்பி ஹாலுக்கு வந்தாள். சுவரிலே பெரிய அளவில் தொங்கிய பஞ்சரத்தினம் படத்தின் அருகே தரையில் எரிந்து கொண்டிருந்த குத்து விளக்கின் அருகே உட்கார்ந்து கொண்டாள். எத்தனை நாட்கள் தொடர்ந்து இந்த வேஷத்தை நீடிக்க முடியும்?

கடலில் மறைந்து போன ராஜ்குமார் மரணமடைந்து விட்டிருந்தால் அவள் இனியும் பூவும் பொட்டுமாய்...

குபீரென்று புரண்டு எழுந்து கண்ணீரைத் துடைத்துக் கொண்டபோது அருகில் காலடி ஓசை கேட்டது. மெல்லத் திரும்பிப் பார்த்தாள்.

குருநாதனும் அவர் மனைவியும் தம்து மகள் அருகே வந்து உட்கார்ந்து கொண்டனர்.

''உன்னை விட்டுப் போக மனசில்லே. ஆனாலும் நாங்க இங்கே தங்கியிருப்பது சரியில்லையே. எல்லாம் ஒரு வழியாக முடிஞ்சு போச்சு. இனிமேலே நம்ப வாழ்க்கையை நாமே சீர்படுத்திட்டுப் போவதுதான் முறை'' — அம்மா மகளின் தோளைத் தொட்டு ஆதரவுடன் சொன்னாள்.

''உன் மாமியார் நோயோட ரொம்ப வேதனைப்பட்டாங்க. மகன் வந்துட்டான் என்கிற மகிழ்ச்சியையாவது அனுபவிச்சுட்டுப் போனாங்களேன்னு நீ மனத்தைத் தேத்திக்கணும். இனி உன் கணவனைக் கவனிச்சுக்கொண்டு நிறைவா நீ வாழணும். இப்படி அழுது உடம்பைக் கெடுத்துக்கிறதிலே யாருக்கு லாபம்? போனவங்க திரும்பியா வரப் போறாங்க?...'' குருநாதன் அன்புடன் கடிந்து கொண்டார்.

''அப்பா!'' என்று விம்மிய அகல்யா அவரது கரங்களைப் பற்றிக் கொண்டாள். கட்டுப்படுத்த முடியாத கண்ணீர் புரண்டு பெருக்கெடுத்துக் கன்னங்களில் ஓடியது.

''என்னம்மா நீ! ரொம்ப மனசைப் போட்டு அலட்டிக்கிறே. மாப்பிள்ளை கூட மருண்டு போய் வாசலிலேயே பொழுது முழுவதும் முழிச்சுக்கிட்டு நிற்கிறார். பார்க்கச் சங்கடமா இருக்கு. நீ கொஞ்சம் மனத்தைத் திடப்படுத்திக்கோ. உன் மாமியாருக்கு வேண்டியதைச் செஞ்சுட்டே. ஏன் இப்படி அழுகிறே...'' தந்தை மகளை அதட்டிக் கேட்டார்.

'அப்பா! வாசலில் நிற்பவர் உங்க மருமகன் இல்லே. இந்த ஆள் மாறாட்டம் உங்க கண்களில் படவே இல்லையா?... அப்பா! அவர் ராஜ்குமாரின் தம்பி காமேஷ்... நம்மையெல்லாம் ஏமாத்திக் கொண்டிருந்தார். தெரிஞ்சுக்குங்கோ... ரெண்டு பேரும் என் மாமியாரின் பிள்ளைகள் இல்லே... அதையும் புரிஞ்சுக்கோங்க...' அலறி அழுது உண்மையைக் கொட்டிவிட வேண்டும் என்ற ஆத்திரம் அவளுக்கு.

ஆனால் இத்தனை நாள் மூடி மறைத்தது ஏன் என்று அப்பா கேட்டு விட்டால்? அவளைப் பற்றி அசிங்கமாக எண்ணி விட்டால்? அப்பாவின் தவறான கணிப்பை விடச் சாவு மேலான தண்டனை ஆயிற்றே?

''அம்மா! என்னால் தாங்க முடியலையே!'' விசும்பியபடி மகள் தாயின் மார்பில் முகத்தைப் பதித்துக் கொண்டாள்.

'தாயிடம் கூடச் சொல்லிக் கொள்ள முடியாத ரகசியமாகி விட்டதே... முத்துமாசி....' மனம் வேதனையில் வெடித்தது.

சிறிது நேரம் அவளது பெற்றோர்கள் கூட இருந்து ஆறுதல் பல சொல்லிவிட்டுக்கிளம்பி விட்டனர்.

எல்லோரும் போன பின்பு வீட்டுக்குள் மயானத்தைப் போன்றதொரு பயங்கர அமைதி நிலவியது.

மாடியினின்று வெளிப்பட்ட காமேஷ் மெல்லப் படிகளில் இறங்கி வந்தான். சுவரோரமாகத் தரையில் அகல்யா உட்கார்ந்திருந்தாள்.

''பூரணி சாப்பாட்டை மேஜை மீது வைத்துப் போயிருக்கிறாள். எடுத்துப் போட்டுக்கொண்டு சாப்பிடு.'' விரக்தியான குரலில் திரும்பிப் பார்க்காது உத்தரவிட்டாள்.

ஹாலில் எரிந்த விளக்கைத் தவிர வீடு இருளில் மூழ்கிக் கிடந்தது. அருகில் வேறு எவரையும் காணவில்லை.

துயரத்தின் எல்லையைத் தாண்டிவிட்ட அகல்யா தன் சூழ்நிலையைப் பாராட்டவில்லை. தனிமையைக் கண்டு அஞ்சவும் இல்லை. அசட்டையாக அமர்ந்திருந்தாள்.

''அண்ணி! எல்லாம் முடிஞ்சுவிட்டது. இனி நீடித்து நான் இருப்பது அர்த்தமில்லை.... அதனால்...''

---

டைரக்டர்: ஏண்டா திருதிருன்னு முழிக்கிறே?

அவன்: கதாநாயகனும் கதாநாயகியும் முத்தக் காட்சியில் நடித்தாங்களே... அந்த இடத்தில் இந்தப் பல்செட் கிடந்தது... நான் யாரிடம் போய் 'இது உங்களுடையதா' என்று கேட்பது... என்றுதான்...

— ஐ. ஜி. மோகன்





## குழந்தைகள்

நீங்கள் பெற்றெடுக்கும் பிள்ளைகள் உங்களுடைய
வர்களல்ல!
இயற்கையின் வாஞ்சையால் உருவாக்கப்பட்ட
வர்கள்.
அவர்கள்,
உங்கள் மூலமாக வந்தவர்களேயொழிய
உங்களிடமிருந்தல்ல.
உங்களுக்குச் சொந்தமானவர்களுமல்ல
உங்களுடைய பாசத்தை அவர்களுக்கு அளி
யுங்கள்.
ஆனால்,
உங்களுடைய எண்ணங்களையல்ல!
காரணம்,
அவர்களுக்குத் தங்களின் சொந்தக் கருத்
துக்கள் உண்டு
அவர்களின்
உடலுக்கும் புகலிடமளியுங்கள்
உள்ளத்திற்கல்ல!
காரணம்,
அது எதிர்காலமென்னும் இல்லத்தில் குடி
கொண்டுள்ளது
அதை உங்களால் எண்ணவோ, கனவால்
காணவோ முடியாது.
அவர்களைப் போலிருக்க நீங்கள் முயலலாம்!
ஆனால் அவர்களை உங்கள் சாயலாக்காதீர்கள்
ஏனெனில்,
வாழ்க்கை பின்னோக்கிப் போவதல்ல!
நேற்றைக்காகக் காத்திருப்பதுமல்ல!

—ஜிப்ரான்
-சதாசிவம் கிருஷ்ணன்

அவன் நிமிர்ந்து பார்த்தாள். துயரம் கப்பிய அந்த முகம் அவன் மனத்தை நெருடியது. குற்ற உணர்வு நெஞ்சை அழுத்த ஒரு கணம் பேச முடியாது தவித்தான்.

''அண்ணி! நான் ஒரு முடிவுக்கு வந்து விட்டிருக்கேன். ஆரம்பத்தில் எனக்கு இந்த வீடு, பணம் எல்லாத்தின் மேலும் ரொம்ப மோகம் இருந்தது உண்மை. ஆனால் இப்போ எனக்கு இவை மீது துளிக்கூட ஆசை இல்லே.''

மௌனமாக அவனை வெறித்துப் பார்த்தாள் அகல்யா.

''நான் சொல்வதெல்லாம் உண்மை. நம்புங்க. எனக்கு இந்தச் சொத்தில் எதுவும் தேவையில்லே. இதெல்லாம் இனி உங்களுக்குத்தான். ரொம்பத் தேவை...''

''என் கணவர் இல்லாதபோது எனக்கு இந்த வீடும் பணமும் முக்கியம்னு நினைக்கிறியா?...'' வறட்சியாக, ஈனமான குரலில் மெல்லக் கேட்டாள் அவள்.

தயக்கத்துடன் வார்த்தைகளை விழுங்கிக் கொண்டான் காமேஷ்.

''எனக்கு என் கையில் தொழில் இருக்கு. நான் மறுபடியும் வெளி நாட்டுக்குப் போய் எப்படியாவது பிழைத்துக் கொள்வேன்.''

''பள்ளி ஆசிரியர் என்கிற பதவி ஏற்கிற திறமை எங்கிட்ட இருக்கு மறக்காதே. அதை வச்சுக்கொண்டு என்னாலும் பிழைக்க முடியும்.''

காமேஷ் வேதனையுடன் மௌனமாக நின்றான். கணவனைத் தன் உயிராகப் பாவித்து வாழ்ந்த இந்த நல்ல பெண்ணுக்கு இப்படி ஒரு துன்பம் ஏற்பட்டது கொடுமையிலும் கொடுமை... தனக்குள் எண்ணி மருகினான்.

''அண்ணி! நான் மட்டமாக நடந்து கொண்டும் நீங்க பெரிய மனசு பண்ணி என்னை மன்னிச்சுட்டீங்க... இந்த ஒன்னுக்காக நான் உங்களை ஒருபோதும் மறக்கவே மாட்டேன். உங்களுக்குக் கனவில் கூட தீங்கு நினைக்க மாட்டேன். இப்ப இந்த நிமிஷமே உங்கிட்ட உத்தரவு வாங்கிட்டு ஊருக்குப் புறப்படத் தயாரா யிருக்கிறேன்'' என்றான்.

''நீ இனி அனாவசியமா இங்கே இருப்பது தவறு. போக வேண்டியதுதான் முறை. ஆனால் யாராவது கேட்டால்....'' அவள் தனக்குள்ளே மெல்லப் பேசிக் கொண்டாள்.

''யாராவது கேட்டால் வெளியூர் போயிருக்கார்னு சொல்லுங்க.''

''அப்போ எனக்கு ஓர் உதவி செய்வியா?'' மெல்ல அவள் எழுந்து நின்றாள்.

''என்ன சொல்லுங்க — முதல் காரியமாச் செஞ்சு முடிக்கிறேன்.'' ஆவலுடன் கேட்டான் காமேஷ்.

''நீ சென்னைக்குப் போனதும் உடனடியா என் கணவர் இறந்து போனது உண்மையா என்பதற்கு ஆதாரத்தை ஆஸ்பத்திரியிலிருந்தோ அல்லது அந்தப் பத்திரிகை ஆபீஸிலோ விவரமா விசாரித்துக் கடிதம் போடணும். எனக்கு இது நிச்சயமாத் தெரிஞ்சாகணும். இதைச் செய்ய உனக்கு நாலு நாள் அவகாசம் கொடுக்கிறேன். செய்வியா?....'' — துயரத்தில் அவள் குரல் நடுங்கியது.

காமேஷின் நெஞ்சு நெகிழ்ந்து போயிற்று.

''அண்ணி! கட்டாயம் செய்கிறேன். அது நிச்சயம் என்று ஆகிவிட்டால் அதற்குப் பிறகு நீங்க என்ன செய்வதாக உத்தேசம்?''

''அதைப்பத்தி நீ கவலைப்படவேண்டாம்.'' சொல்லிக் கொண்டே மெல்லச் சென்று கதவைத் திறந்தாள்.

படிகளை விட்டு இறங்கித் தெருவில் வீடு எழுப்பிய நிழல் ஒன்றுக்குள் மறைந்து போன காமேஷ் மெல்லத் திரும்பிப் பார்க்கு முன் படார் என்று கனமான வாயிற் கதவை அழுத்தமாகச் சாத்தி அகல்யா தாளிட்டுக் கொண்டு விட்டாள். யாருமில்லாத அந்த வீட்டுக்குள் அவள் மெல்ல நடந்தாள். குழல் விளக்கை அணைத்துவிட்டு விடி விளக்கைப் பொருத்தினாள். மாமியாரின் படத்தருகே தரை மீது உட்கார்ந்தாள்.

நான்கு நாட்களில், ராஜ்குமார் கடலில் இறந்துபோனது உண்மை என்ற ஆதாரத்துடன் காமேஷிடமிருந்து கடிதம் வந்து விட்டால்?

தாங்க முடியாத துயரத்தில் தரைமீது குப்புறப் படுத்துக் கொண்டு தேற்றுவார் இன்றிக் குலுங்கி அழுதாள்.

அவள் கொடுத்திருந்த நான்கு நாள் கெடு விரைந்து சென்று விட்டது. காமேஷிடமிருந்து எந்த விதமான தகவலையும் காணோம். காலையிலும் மாலையிலும் தபால்காரர் வரவை எதிர்நோக்கி வாசலுக்குப் பலதடவைகள் நடந்து அவள் அலுத்துப் போனாள்.

இடையே வேலையாள் சிங்காரத்தின் அனுவசியத் தலையீடு வேறு.

''சொல்லாமக் கொள்ளாம ஐயா திடு திப்புனு பட்டணமா போயிருக்கார்?''

''என்னவோ அவசர ஜோலியாப் போயிருக்கார்!'' பொங்கி வந்த எரிச்சலை அடக்கிக் கொண்டு பதிலளித்தாள்.

மகளைக் காண வந்த குருநாதன் தம்பதியருக்கு வியப்புத் தாங்க முடியவில்லை.

''என்னம்மா இதுசமயம் உன்னை விட்டு அப்படிப் பட்டணத்தில் என்ன வேலை?'' தாயார் எரிச்சல்பட்டாள்.

''சிங்காரமும் பூரணியும் துணைக்கிருக்கிறாங்கன்னு மாப்பிள்ளைக்குத் தெம்பு. ஏதோ முக்கிய காரியம் தொட்டுத்தான் அவசரமாப் போயிருக்கார். இல்லாட்டி நம்ம குழந்தையைத் தனியே விட்டுப் போக அவருக்கு மட்டும் மனசு கேட்குமா?'' — அப்பா தம் மருமகனுக்காகப் பரிந்து பேசினார்.

'என்னைத் தனியாக இருக்க விட்டு விட்டு உங்க மருமகன் ஒரேயடியாகப் போய்விட்டாரப்பா....'

—உண்மையை இன்னமும் சொல்ல முடியாத ஓர் அவல நிலை. சுவரிலே தலையை மோதிக் கொண்டு கதற வேண்டும் போல் துயரம் அவளுள் பொங்கிப் புரண்டது.

உணர்வுகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு கேட்டவர்களுக்குச் சட்டென்று ஏதோ பதில் சொல்லி வைத்தாள்.



நண்பர்: 'இன்னிக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கீங்க போலிருக்கே...! என்ன விஷயம்?'
டி.வி. அறிவிப்பாளர்: 'இன்னிக்கு பூரா நான் நேயர்களுக்கு வருந்தவே இல்லே...!'
—எஸ். சங்கர நாராயணன்

அன்று இரவு அவளுக்கு உறக்கமே இல்லை. கூடத் துணைக்குத் தங்கியிருக்க முன்வந்த தாயின் உதவியை மறுத்து விட்டாள். அவளுக்குத் தனியாக இருக்க இனிப் பயமேன்? வாழ்நாள் முழுதும் தனியாக இனி இருக்க வேண்டிய நிலை வந்துவிட்டிருக்கிறதே?

காமேஷ் கடிதத்தில் அந்தப் பயங்கரச் செய்தியைத் தெரிவிக்கத் தயங்கிக் கொண்டு ஒத்திப் போட்டுக் கொண்டிருக்கிறான். சந்தேகமே இல்லை. ராஜ்குமார் கடலில் மூழ்கி இறந்து போனது உண்மை... உண்மையே தான்....

விசும்பி விசும்பி அழுது அவளுக்குத் தலைவலி வந்து விட்டது. உறக்கமின்றி விட்டுக் குள்ளே எழுந்து உலவினாள்.

இப்படிப்பட்ட நரக வேதனையுடன் அவள் நீடித்து வாழ வேண்டுமா? மீண்டும் மீண்டும் அதே கேள்வி....

ஆறாவது நாள் காலை சூரியன் இருளைச் சுருட்டிக் கொண்டு பனிச்சென்று புறப்பட்டு விட்டது.

காமேஷின் பதிலை எதிர்பார்ப்பதில் பயன் இல்லை என்று அவள் குளித்து முடித்துவிட்டு ஒரு கடிதம் எழுத உட்கார்ந்தாள்.

''மேஜையின் மீது நீ எனக்காக விட்டுப் போயிருந்த முகவரி கிடைத்தது. நன்றி. புரசவாக்கம் ராமநாயக்கன் தெருவில் உள்ள விஸ்வா பவனில்தான் நீ இன்னமும் தங்கியிருப்பாய் என்ற நம்பிக்கையில் எழுதுகிறேன். மூன்று நாட்களுக்கு முன் என் மாமியாரின் பீரோவை ஒழுங்கு செய்தபோது ஒரு கடித உறை கிடைத்தது. இதைத்தான் என் மாமியார் ஒரு நாள் நடு இரவு தட்டுத் தடுமாறித் தேடிக் கொண்டிருந்தார்கள் என்ற உண்மை எனக்குப் புலனாகியது. மகனிடம் தந்து விடச் சொல்லி என் மாமனார் எழுதிய கடைசிக் கடிதம் அதில் இருந்தது. நான் படித்துத் தெரிந்து கொள்வதில் இனித் தவறில்லை என்று பிரித்துப் படித்தேன். நீ சொன்னது முற்றிலும் உண்மை. என் மாமனார் எல்லாவற்றையும் விவரமாகத் தம் மூத்த மகனுக்கு எழுதி முடிவில் அவரது மன்னிப்பைக் கேட்டுக் கெஞ்சியிருந்தார். தம்பியான உனக்குத் தமையன் சொத்தில் ஒரு பங்கு கொடுத்து ஆதரிக்க வேண்டும் என்று வெகுவாகக் கேட்டிருந்தார். உன்னை எங்கே தேட வேண்டும் என்ற விவரமும் கொடுத்திருந்தார். என் கணவர் செய்ய வேண்டிய கடமையை நான் செய்து முடிப்பேன். கவலைப்படாதே. உனக்குச் சௌகர்யப்பட்டபோது நீ வந்து உன் பங்கு சொத்தை ஏற்றுக் கொள்ளலாம். ஏற்பாடுகள் செய்து விடுவேன். —உன் அண்ணி அகல்யா''

கடிதத்தை உறையில் இட்டு ஒட்டி முகவரி எழுதி முடித்தாள். சிங்காரத்திடம் கொடுத்துத் தபாலில் சேர்க்கச் சொன்னாள்.

''ஐயாவுக்குக் கடிதாசியா?'' — சிங்காரம் கேட்டபோது அவள் மௌனமாகக் கோபத்தை அடக்கிக் கொண்டு தலையை அசைத்தாள்.

பின்னர் பூரணியை வீட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டுத் தனியே கோவிலுக்குப் புறப்பட்டான்.

காலை பூஜை முடிந்து வெகு நேரமாகி விட்டதால் ஆள் நடமாட்டமின்றிக் கோயில் வெறிச்சென்றிருந்தது. பின் பக்கத்துத் தோட்டத்திலே பூசாரி யாருடனோ பேசுவது மட்டும் லேசாகக் கேட்டது. வெளி வாயிலில் நின்றபடி அவன் கோவிலுக்குள் பார்த்தான்.

கர்ப்பக்கிருகத்தில் தொங்கிய சர விளக்கின் ஒளியில் மினுக்கிட்ட அம்மனின் முகத்தைச் சிறிது நேரம் துயரமும் வியப்புமாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

அகில உலகமே அதிசயிக்கத் தக்க அற்புதங்களை நிகழ்த்திப் பிரமிக்க வைக்கும் ஆற்றல் படைத்த அம்பாளே அவளைக் கைவிட்டு விட்டாள். இனி அவள் யாரை நம்பி வாழப் போகிறாள்?

அர்த்தமற்ற கொடுமையான அந்த வருங்காலத்தை எண்ணிய மாத்திரம் கண்கள் கலங்தன. நெஞ்சு துயரத்தில் விம்மியது. பார்வையை நீர் மறைக்க மெல்லத் தள்ளாடியபடி அவன் வீட்டுக்குத் திரும்பி நடந்தான்.

**வீ**ட்டு வாயிற் கதவு பரத்தலாகத் திறந்து கிடந்தது. திடுக்கிட்டுப் போன அகல்யா முந்தானையால் கண்களைத் துடைத்துக் கொண்டு வேகமாக உள்ளே நுழைந்தாள்.

ஹாலில் சுவரில் மாட்டியிருந்த பஞ்சரத்தினத்தின் படத்தருகே அவன் நின்றுகொண்டிருந்தான்.

ஆனந்த மிக்க அதிர்ச்சி... வீடே சுற்றுவது போன்ற மலைப்பு.

''அத்தான்! நீங்க....நீங்க...'' பேச முடியாது திக்கிக் கொண்டு விம்மியபடி ஒரே தாவலில் அவனை இறுக்க அணைத்துக் கொண்டு 'கோ'வென்று கதறிவிட்டாள்.

கண் கலங்கிப் போன ராஜ்குமார் அவள் முகத்தை நிமிர்த்திக் கண்ணீரை மெல்லத் துடைத்து விட்டான்.

''அகல்யா! நான்தான்... உன் ராஜ்குமார்தான்... வந்திருக்கேன். அழாதே... என்னை நல்லா பார்...'' உணர்ச்சி வசத்திலே தடுமாறினான்.

''அத்தான் நம்ப முத்துமாரி... நம்மைக் கைவிடலே அத்தான். எப்பேர்ப்பட்ட அற்புதத்தைச் சாதிச்சிட்டா நம் ஆத்தாள். கடல் முழுதும் தேடி உங்களைக் கைப்பிடியாக் கொண்டு வந்து ஒப்படைச்சுட்டாளே!.... என் வயித்திலே பால் வார்த்திட்டாளே... என் தாய்... அவள் கருணைக்கு ஈடு இணை ஏது அத்தான்... என் உடம்பெல்லாம் நடுங்குது... என்னைக் கொஞ்சம் பிடிச்சுக் கோங்கோ....'' பதறினாள். ஆனந்தத்தில் விம்மி விம்மி அழுதாள்.

''உண்மையில் இது ஆத்தாளின் அற்புதம் தான். கடலுக்குள் இருந்த கற்பாறையில் மோதி மயக்கமாகி மூழ்கிவிட்ட நான் மறுபடியும் பிழைத்தது ஓர் அதிசயம். இந்த அற்புதத்தை நிகழ்த்தியவள் அவள்தான். இதற்கேது சந்தேகம்?''

''உங்களைப் பார்க்காமலே அத்தை...'' விக்கினாள் அகல்யா.

''எல்லாம் எனக்குத் தெரியும். காமேஷை நான் சென்னையில் சந்தித்தேன். எல்லாத்தையும் தம்பி விவரமாகச் சொன்னான். இப்படி நடக்க வேணும்னு இருந்தது நடந்தது...''

''ரொம்பக் குழப்பமாஇருக்கு அத்தான்.''

''நான் கடலில் மூழ்கிப் போனது உண்மை. கற்பாறையில் மோதிக் காயமாகி மயங்கிப்போன நான் அப்படியே நீருக்குள் மறைஞ்சு போனபோது என்ன நடந்ததுன்னு



மனைவி: என்னங்க இது கதாநாயகி வில்லனுடன் சேர்ந்து கொண்டு கதாநாயகனைக் கொல்வதாகக் கதையை முடிக்கறேள்?

எழுத்தாளர்: ஆசிரியர் இதுவரை யாரும் எழுதாத மாதிரி ஒரு கதை எழுதிக்கிட்டு வரச் சொன்னார்!

—லலிதா செல்லப்பா

எனக்கே தெரியாது. முழிச்சுப் பார்த்தப்போ ஒரு தனியார் மருத்துவ மனையில் இருப்பதை உணர்ந்தேன். ஆனால் எனக்கு நினைவு வரப் பல நாட்கள் பிடிச்சதாம். நர்ஸிங் ஹோமின் டாக்டர்தான் விவரமா எல்லாத்தையும் சொன்னார்.''

''அங்கே எப்படிப் போனீங்களாம் அத்தான்?'' — விம்மலை அடக்கிக் கொண்டு வியப்புடன் கேட்டாள் அகல்யா.

''நான் மூழ்கின இடத்துக்குச் சற்றுத் தூரத்திலே ஓர் அமெரிக்கப் பயணி நீந்திக் கொண்டிருந்தாராம். அவர் நான் அலைகள் நடுவே தத்தளிப்பதைக் கவனித்துச் சிரமப்பட்டு நீந்திக் கொண்டு வந்து என்னைக் காப்பாற்றி இழுத்துக் கரை சேர்த்தாராம். நான் யார், எந்த ஊர் என்று ஒன்றும் தெரியாதபோதும் என்னைக் கருணையோடு



மனைவி ஊரிலில்லாதபோது ஒரு கணவன் புழுங்கியது ''இப்படி: இந்த வீட்டிலே எல்லா பீரோ சாவிகளையும் அவள் வைத்துக் கொண்டிருக்கிறாள். எனக்கு ஆட்சேபணையில்லை. குறைந்த பட்சம் கடிகாரச் சாவியையாவது என் கிட்டே கொடுத்து வைக்கக் கூடாதா?''

கோவி. பரஞ்ஜோதி



அந்தத் தனியார் மருத்துவ மனையில் வைத்துத் தமது செலவில் வைத்தியம் செய்ததுடன் எனக்காகச் சில நாட்கள் சென்னையிலேயே தங்கியிருந்தாராம். துணி வாங்கிக்கவும் ஊருக்குப் போகவும் பணத்தை வைச்சுட்டு அவர் சில நாட்களுக்கு முன் போயிட்டார்.''

''யாருக்கு யார் வந்து உதவியிருக்காங்க பார்த்தீங்களா அத்தான்!'' கண்ணீரைத் துடைத்துக்கொண்டு வியப்புடன் வினவினாள்.

''நம் ஆத்தாள் அந்த ரூபத்திலேதான் வந்தாள். எல்லாம் நீ எனக்காக அவளிடம் மனம் உருக வேண்டிக் கொண்டதன் பயன். நம்பினவங்களை நம் தாய் கைவிட மாட்டாள் என்பது நம் விஷயத்திலே உண்மையாச்சு பார்த்தியா?''

கலைந்து புரண்ட அவளது கூந்தலை ஒதுக்கி அவளைத் தன் நெஞ்சோடு அணைத்துக் கொண்டான்.

''அந்தப் பரோபகாரி யாருன்னு தெரிஞ்சா...''

''அவர் தமது முகவரியை விட்டுப் போயிருக்கார். அவரது மகன் கடலில் மூழ்கி மரணமடைந்து போன துயரத்தின் துடிப்புத்தான் அவர் அப்படி கொந்தளிக்கிற கடலில் நீந்தி என்னைக் காப்பாற்ற உதவிய தாம். டாக்டர் எல்லாத்தையும் சொன்ன போது என் மனசிலே அவர் முத்துமாரியாகத்தான் தென்பட்டார். நம்ப ரெண்டு பேரும் நன்றி தெரிவித்து அவருக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டு விடுவோம். அதோட அவர் செலவழிச்ச பணத்தை எப்படியாவது அவருக்குத் திருப்பிவிட முயற்சி எடுப்போம்.''

''அப்புறம் அத்தான்....''

''பிறகு நான் தங்கியிருந்த ஹோட்டலுக்குப் போனபோது காமேஷ் செய்த மோசடி விளங்கியது. அதை அவர்களிடம் காட்டிக் கொள்ளாமல் நேரே அவன் தங்கியிருந்த லாட்ஜுக்குப் போனேன். அப்பத்தான் வெளியே புறப்பட அவன் அறைக்கதவைச் சாத்திக் கொண்டிருந்தான். என்னைப் பார்த்துப் பேயைக் கண்டது போல் பீதியோட அலறினான். எல்லாத்தையும் ஒப்புக்கொண்டான். எனக்கு வந்த ஆத்திரத்தில் அவனை அடிச்சு நொறுக்கணும் போலத்தான் இருந்தது. செய்யக் கூடாத மகா பாதகத்தைச் செய்துவிட்டுத் தம்பின்னு வேறே உறவான்னு பொங்கிப் போனேன். ஆனால் அவன் உன்னைத் தன் தெய்வமா நினைச்சுப் பெருமையாப் பேசியதைக் கேட்டு மனசு குளிர்ந்து போய் மன்னிச்சுட்டேன். உடலே தாமதம் பண்ணாம ராத்திரி பஸ் பிடிச்சு ஊர் வந்து சேர்ந்தேன். வழியிலே சிங்காரம் என்னைக் கண்டு ஆச்சரியப்பட்டு 'இந்தாங்க உங்க கடுதாசி'ன்னு இதைக் கொடுத்தான். உன்னைக் கேட்காம அதைப் பிரிச்சு...''

''உங்க அப்பா எழுதின கடிதத்தை உங்களைக் கேட்காம நான் பிரிச்சுப் படிச்சதுக்கு.....''

''நமக்குள்ளே ரகசியம் எதுவுமே இடையாதுன்னு அர்த்தம்.... அகல்யா....''

அவளைத் தன் அருகே இழுத்துக் கொண்டான். ''உன் இஷ்டப்படியும் அப்பா சொல்படியும் காமேஷுக்கு நம் சொத்தில் பங்கு உண்டு. கவலை வேண்டாம்.''

''அத்தான்! உங்க தம்பி விவரமாச் சொன்னதைக் கேட்டபிறகு என் மேலே உங்களுக்குத் தப்பா...''

அவள் முடிக்கவில்லை. துயரத்துடன் திக்கினாள்.

''பூக்குழியிலே நடந்து பூவாக என் முன் வந்து நிற்கிறாள் என் அன்பு மனைவி அகல்யா. என்றும் எப்பவும் என் மனசிலே இன்பமான நினைவுதான் நிறைஞ்சு இருக்கும்...அகல்யா'' ...சொல்லிக் கொண்டே அவளைத் தன் நெஞ்சோடு இறுக்கமாக அணைத்துக்கொண்டான்.

இத்தனை துன்பங்களுக்குப் பிறகு இப்போது அவர்கள் மனத்தில்தான் எத்தனை நிம்மதி — நிறைவு — ஆனந்தம்?

**முற்றும்**





சினி ஸ்டில்லும் சிந்தனையும்

# "எளியவனாய் வாழ்ந்த பெரிய மனிதன்!"

— கமலஹாசன்



**"செம்மீன் படத்தில் வரும் இந்தக் காட்சியைப் பார்த்ததும் உங்களுக்கு என்னென்லாம் நினைவுக்கு வருகிறதோ கூறுங்கள்" என்றேன். கமல் சொன்னார்:**

பல்வேறு வகையான நினைவுகள் இந்தப் படத்தைப் பார்த்ததும் எனக்கு ஏற்படுகின்றன. அழகான கடலின் நடுவில் இப்படி ஒருவர் அமர்ந்திருப்பதை யார் பார்த்தாலும் கண்டிப்பாக இந்தப் படம் எடுக்கப்பட்ட பகுதி கேரளம் என்று உடனே கூறுவார்கள். சிறு படகில் அமர்ந்திருக்கும் நடிகர் சத்யன்தான்.

மறைந்த சத்யன் ஒரு சினிமா நடிகரைப் போலவே இருக்க மாட்டார். எல்லா விதங்களிலும் எளிமை. நிச்சயமாக அதில் இனிமையும் கலந்திருந்தது. சாதாரணமாக நடிகர்களிடம் காணப்படும் படாடோபமோ பகட்டோ அவரிடம் சிறிதும் இருந்ததில்லை. எல்லோரும் உடுத்துவது போல் கைலியையும் முண்டாசையும் கட்டிக் கொண்டு ஒரு பீடியைப் புகைத்துக் கொண்டு ஓர் ஓரமாக நின்றிருப்பார். கூட்டத்தில் அவரை அடையாளம் கண்டு பிடிப்பது ரொம்பச் சிரமம். காரணம் தனித்திருந்து முக்கியத்துவம் பெற விரும்பாமல் கூட்டத்தோடு கூட்டமாகக் கலந்து விடுவார்!

எனக்கு இன்னொன்றும் நினைவுக்கு வருகிறது. நான் சிறுவனாக இருந்தபொழுது 'கண்ணும் கருளும்' என்ற மலையாளப் படத்தில் நடித்து வந்தேன். நான் குழந்தையாக இருந்த காரணத்தினால் இரவில் நேரம் ஆக ஆகத் தூக்கம் வரும். பல நாட்களில் நான் தூங்கியே விடுவேன். அப்போதெல்லாம் சத்யன் என்னைத் தோள் மீது சுமந்து வந்து என் தாயாரிடம் ஒப்படைப்பார்.

படத்தில் கடலலைகளைப் பார்க்கும்போது எனக்கு அன்னை வேளாங்கன்னி படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்த காலம்தான் நினைவுக்கு வருகிறது. ஒரு நாள் நானும் (இப்பொழுது "மனிதரில் இத்தனை நிறங்களா" போன்ற படங்களை இயக்கியுள்ள) ஆர். ஸி. சக்தியும் கடலில் நீந்திக் குளிக்க விரும்பினோம். எனக்கு நீந்தத் தெரியும் என்று கூறலாமே தவிர சாம்பியன் அல்ல.

கடலலைகளில் நீந்த அசாதாரண பலமும் திறமையும் வேண்டும். நானும் சத்தியும் விளையாட்டுத்தனமாக நீந்த ஆரம்பித்தோம். அலைகள் இழுக்க எங்களையும் அறியாமல் கடலில் வெகு தூரம் சென்று விட்டோம். திடீரென்று திரும்பிப் பார்த்தால் கண்ணுக் கெட்டிய தூரம் வரை கரையைக் காண வில்லை. எனக்குப் பயம் பிடித்துக் கொண்டு விட்டது. பயத்தின் விளைவால் உடலும் மனமும் சோர்ந்தன. கரையை நோக்கி நீந்தத் தொடங்கினோம். என்னால் நீந்த முடியவில்லை. இதற்கிடையில் நான் உப்புத் தண்ணீரைக் குடிக்க ஆரம்பித்து விட்டேன். ஆனாலும் எப்படியாவது கரையை அடைந்து விடவேண்டும் என்ற ஆர்வத்தால் கையை யும் காலையும் அசைக்க ஆரம்பித்தேன். கிட்டத்தட்ட இருபது நிமிடங்களுக்கு மேல் தத்தளித்துக் கஷ்டப்பட்ட பிறகுதான் கரை இருக்கும் இடமே தெரிந்தது. கைகள் இரண்டும் விண் விண் என்று தெறிக்க ஆரம் பித்தன. பாதி உயிர் போன நிலையில்தான் கரையை அடைந்தோம். கடலைப் பார்க் கும்போதெல்லாம் இந்தச் சம்பவம் எனக்கு நினைவு வரும்.

கடலைப் பார்த்ததும் மற்றொன்றும் ஞாப கம் வருகிறது. வறுத்த மீன்! திருவனந்த புரத்தில் நன்றாக வறுத்த மீன் கிடைக்கும். மிக ருசியாக இருக்கும்.

—பேட்டி: **சலன்**

அடுத்த இதழில் சுஜாதா கதை சொல் கிறார்!

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

சென்னை கிரிக்கெட் டெஸ்டில் பாகிஸ்தானை வென்று இந்தியா சாதனை புரிந்ததை யொட்டி சிலருடைய பெயர்களை ஏன் இப்படி மாற்றி எழுதக் கூடாது?

அதிக ரன் எடுத்த கவாஸ்கரை,
—''கவாஸ்கோர்'' என்றும்

பந்து வீச்சில் அபார திறமை காட்டிய கபில் தேவை—''க'பௌல்' தேவ்'' என்றும்

மிக வேகமாக ஓடி ரன் எடுத்து அவுட் ஆகாத ரோஜர் பின்னியை
—''ரோஜர் 'ரன்னி''' என்றும்

காலை முதல் மாலை வரை சலிக்காது பந்து வீசிய இம்ரான்கானை
—''தம்ரான்கான்'' என்றும்

பாகிஸ்தான் திணறிய போதும் பவுண்டரி யாக விளாசிய வாசிம் ராஜாவை
—''விளாசிம் ராஜா'' என்றும்

ஏன் அழைக்கக் கூடாது?

-வி. ஜெயபால்



படம்: சென்னை டெஸ்டின் சிறந்த ஆட்டக்காரராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கபில் தேவுக்கு புல்லெட் மோட் டார் சைக்கிள் பரிசளிக்கிறார் என்ஃபீல்டு மானேஜிங் டைரக்டர் எஸ். விஸ்வநாதன்



## ஃபிலிமோத்சவ் அல்ல!

ஃபிலிமோத்சவ் - 80ல் திரையிடப்பட்ட ஒரு சினிமா வின் ஸ்டில் என்று நினைத் தால் ஏமாந்தீர்கள்! மேற்கு ஜெர்மானியப் பிரதமர் ஸ்மித் தும் பிரிட்டிஷ் பிரதமர் மார்கரெட் தாட்சரும் டப்ளின் நகரில் பேச்சு வார்த்தைகள் நடத்தினர். மாறாத புன்ன கையுடன் இருவரும். இருந் தாலும் ஐரோப்பிய பொதுச் சந்தை குறித்துக் கருத்து வேற்றுமைகள் கணிசமாக இருந்தன!

சிறு வயதில் உங்களுக்குப் பல்வலி வந்தபோது பாட்டி
கிராம்புத் தைலம் தடவிக் குணப்படுத்தினாரோ நினைவிருக்கிறதா?
உங்கள் பல் டாக்டர் இன்று கூட அதை உபயோகிக்கிறார்!

# இதோ

# புதிய ப்ராமிஸ்

## காலங்காலமாக பயன்பட்டுவரும்
## கிராம்புத் தைலம் கொண்ட இணையற்ற டூத்பேஸ்ட்

Promise

The unique toothpaste with time-tested clove oil

பல்சாரா
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்

அட!
ப்ராமிஸ் போல
டூத்பேஸ்ட்டை ஏன்
இதுவரைக்கும்
யாரும்
தயாரிக்கல!

கிராம்புத்தைலம் கொண்ட புதிய ப்ராமிஸ்
அளிக்கும் நன்மையைப் பாருங்கள்:

1. பற்சிதைவி லிருந்து பாதுகாக்கிறது.



2. வாய்க்குப் புத்துணர்ச்சி தருகிறது, துர்நாற்றத்தை அகற்றுகிறது



## ஆரோக்கியமான பற்கள், ஈறுகள் மற்றும்
## புத்துணர்ச்சிமிக்க மூச்சுக்கு ப்ராமிஸ்

CHAITRA-BLS-369 TAM

# ரசனைகள்

கோமகள்



அண்ணாவுக்கு ரசனை அதிகம்.

அதைப் பலமுறை கண்டு வியந்திருக்கிறேன் நான்.

ஒன்றுக்குப் பத்துக் கடை ஏறித்தான் சட்டைத் துணியோ, பாண்ட் துணியோ எடுப்பான். சட்டையைக் கூட கச்சிதமான அளவில்தான் தைத்துக் கொள்வான்.

மோட்டார் பைக்கை அவன் துடைப்பதும், பாலிஷ் போடுவதும் அந்தக் காலனிக்கே வெளிச்சம். அத்தனை பய பக்தி! "என் உருவம் அதில் தெரியணும்! போய் ஒரு டப்பா பாலிஷ் வாங்கிட்டு வா சேகர்!" என்று என்னை வேலை வாங்குவான் அண்ணா.

டில்லியிலிருந்து வந்திருந்தாள் அடுத்த வீட்டு ஜானகி. "என்ன ஜானு! முகம் களையா இருக்கும் உனக்கு! முகத்தையே கோரமாக்கற அளவுக்கா அத்தனை பெரிய ஒரு தோடு போட்டுப்பா! உன் ஹஸ்பெண்ட் ரொம்பச் சகிப்புத் தன்மை உள்ளவர் போல் இருக்கு! பாவம், அவரைச் சோதிக்காதே! இதைக் கழட்டிட்டுப் பழையபடியே ரிங்கைப் போட்டுக்கோ. அதுதான் உனக்குப் பாந்தமாயிருந்தது!"

புறப்பட்டுப் போகிற போக்கில், அவளைப் பார்த்த ஒரு பார்வையில், ராஜா இப்படிச் சொல்லிவிட்டுச் சென்றான் என்றாலும், அவன் கூற்றில் உண்மை இருக்கும், அவன் ரசனை மாற்றுக் குறையாதது என்பதை உணர்ந்த ஜானு, அக்கணமே காதில் 'ரிங்' அணிந்து கொண்டாள்.

சாயந்திரம் அதைப் பாராட்டும் விதமாக, "குட்!" என்று கூறிவைத்தான் ராஜா.

"நம்ப ராஜாவோட அழகுக்கும், ரசனைக்கும் ஏற்றவளாப் பெண் பார்க்கணும். நாம் போய் முதலில் பெண்ணைப் பார்த்துட்டுத்தான் அவனை அழைக்கணும்..." என்றெல்லாம் திட்டமிட்டு அம்மா, பல இடங்களில் பெண் பார்த்தாள்.

சென்ற வாரம் அம்மாவும் அப்பாவும் பார்த்துவிட்டு வந்த ஒரு பெண்ணைப் பற்றி வாய் ஓயாமல் பேசிக் கொண்டே இருந்தனர்.

"பெண் எலுமிச்சம்பழ நிறம். அவள் உதடுகள் ஆப்பிளைப் போல் சிவந்திருக்கும். உடம்பு தளதளன்னு அப்படி ஓர் அழகு. பி.ஏ. படிச்சுட்டுத் துடுக்குத்தனம் இல்லை. அடக்கம், ஒடுக்கம்... குடும்பப் பாங்கு... நம்ப ராஜாவின் ரசனைக்கு ஏத்தவள்..."

மற்றவர்களின் விமரிசனங்கள் ராஜாவிடம் ஒரு குறுகுறுப்பை கூட்டின. அவன் நிதானமாக இருப்பதைப் போலக் காட்டிக் கொண்டாலும், அந்தப் பெண்ணைப் பார்க்க ஆவலாக இருக்கிறான் என்பது புரிந்தது.

"என்ன ராஜா! நமக்கு இஷ்டமில்லேன்னு நினைச்சுடுவார் ரங்கநாதன். நாளைக்குப் போகலாமா? பெண்ணைப் பார்க்க?" என்று ஆரம்பித்தாள் அம்மா.

"நாளை சாயங்காலம் விசுவநாதன் வீட்டுக்குப் போகணுமே. நாலு நாலரைக்குப் பெண் பார்ப்பதாக ஏற்பாடு." அப்பா ஞாபகப்படுத்தினார்.

"ரங்கநாதன் வீட்டுப் பெண்ணை ராஜா முதலில் பார்க்கட்டும். அந்தப் பெண்ணை இவனுக்குப் பிடிச்சுடுங்கறதிலே சந்தேகமே இல்லை. ஆனாலும் திரும்பும்போது விசுவநாதன் வீட்டையும் பார்த்தாப் போச்சு."

ரசனை மன்னனான ராஜா கச்சிதமாக உடுத்திக் கொண்டு சிரிப்பு வழியும் முகத்தோடு புறப்பட்டான். 'லட்சுமிகர'மான பெண் வீட்டுக்கு நானும் ராஜாவுடன் சென்றிருந்தேன்.

அந்தப் பெண் வந்தாள்.

அம்மா சொன்னது அத்தனையும் மெய். இவள் ராணிதான். இவனுக்கேத்த லட்சுமிதான் அவள். நிறத்திலும், அழகிலும், அமைப்பிலும்... ஓ! இவள் என் அண்ணியாக வர ரொம்பப் பொருத்தமானவள்!

அடக்கமாக எங்களோடு வந்து சகஜமாக உட்கார்ந்தாள். கைகூப்பிவிட்டுப் போய் விட்டாள். அவள் எழுந்து போன பின்பும் வெகு நேரம் அந்த இருக்கையில் அவள் இருப்பதைப் போலவே ஒரு பிரமை என்னுள் தோன்றியது.

அண்ணாவின் முகத்தைப் பார்த்தேன். அவன் முகத்தில் ஒரு மலர்ச்சியும் குறுகுறுப்பும் முற்றுகையிட்டிருந்தன.

"எப்படிடா சேகர்?" என்று மெல்ல என்னைக் கேட்டபோது, நான் வெட்கத்தோடு சொன்னேன். "எனக்குப் பிடிச்சிருக்கு. உனக்கு?"

அண்ணா நிறைவோடு சிரித்தான்.

அடுத்து விசுவநாதன் வீட்டில் நுழைந்தோம். இந்தப் பெண் எங்களோடு சகஜ

மாக உரையாடினுள். நாணப்படாமல், நம்பிக்கையோடு ராஜாவைப் பார்த்துச் சிரித்தாள்.

அவள் மேல் படிந்திருந்த வைரங்கள் அவளை மறைத்திருந்த பட்டாடைகள், அவள் பிம்பங்களைப் பிரதிபலிக்கும் கண்ணுடிகள், சாண்ட் லியர்கள், எமல்ஷன் பெயிண்ட் சுவர்கள், அவள் காலடியில் நழுவும் பளிங்குத் தரை. அவள் வீட்டுக் குஷன் சோபாக்கள், மெத்தைகள், திரைச் சீலைகள், அபூர்வமான சித்திரச் சிற்பங்கள், கனிகளைக் குளிர்விக்கும் ஃப்ரிஜ்ஜூம், காற்றைக் குளிர்விக்கும் ஏர்கண்டிஷன் யூனிட்டும்... என்று எத்தனை எத்தனை கண்களுக்கு விருந்தாகத் தெரிந்தவையோ, அத்தனைக்கும் நேர்மாறும்.....

''எப்படிடா சேகர்?'' ராஜாவின் கேள்வி என்னை உசுப்பியது.

நான் அந்தப் பெண்ணைப் பார்த்தேன்.

''எனக்கு 'இம்ப்ரஸ்' ஆகலே அண்ணு!''

அண்ணு சிரித்துக் கொண்டான்.

வீட்டுக்குள் நுழைந்ததும் நுழையாததுமாக அம்மா கேட்டாள். ''என்னடா ராஜா! முதலில் பார்த்த பெண்தானே உன் சாய்ஸ்?''

''இல்லையம்மா!'' பளிச்சென்ற மறுப்பு அவன் குரலில் ஒலித்தது.

''என்னடா சொல்றே?'' நம்ப முடியாதவளாகக் கேட்டாள் அம்மா.

''என் சாய்ஸ் ரெண்டாவது தானம்மா!''

''டேய்! டேய்! என்னடா ராஜா! நிஜமாத்தான் சொல்றியா?'' அவன் சொற்களை ஜீரணிக்க முடியாமல் அம்மா விழித்தாள்.

''அண்ணு!'' என்று வெகு நேரம் கழித்து நிகழ் காலம் புரிந்தவனுக நான் பதறினேன்.

அண்ணு என்னைப் பார்த்துச் சிரித்துவிட்டு, அந்தச் சிரிப்பு மாறுத முகத்துடனேயே அம்மாவைப் பார்த்து, ''ஆமாம்மா!'' என்றுன்.



''ஐயோ ராஜா! இமேர்னு புரிஞ்சுக்க முடியாதவனாயிட்டியே, எப்படிடா? அவள் அவலட்சணமும், திமிரடியான செயல்களும், செல்வச் செருக்கும்...''

''இங்கே காறை பெயர்ந்த வீடும், கந்தல் உடைகளும், கழுநீர்க் காப்பியுமான சூழ்நிலையில் புறக் கண்களுக்கு அழகு தோற்றம் தரும் ஒரு பெண். அங்கே அவலட்சணம் என்ற முத்திரையோடு லட்சுமியையே கட்டியாளும் கோமகவதி. இரண்டுபேருமே என் முகத்தைப் பார்த்து நிற்கிறார்கள். தேர்ந்தெடுக்கும் சலுகை எனக்கு உண்டு. உரிமையாகப் போகிறவள் எனக்கல்லவா? இப்போது நான் நிதானமாக நினைத்துப் பார்க்கிறேன். வெறும் அழகைத் தேடினால் மட்டும் அதிர்ஷ்டம் வருமா? அஷ்ட ஐஸ்வர்யங்களையும் எனக்குத் தரப் போகிறவளுக்கு அழகு இல்லை என்றால் என்ன? அந்தச் செல்வாக்கில் வளர்ந்தவளுக்குத் திமிரும், மதர்ப்பும் இருந்தால்தான் என்ன?''

அண்ணாவின் நிதான மொழிகள் எங்கள் செவிப் பறையில் இடி முழக்கமாக ஒலமிடுகிறது.

''ரசனைகளைக் குப்பைத் தொட்டியில் போடு! வெறும் ரசனைகள் வாழ்க்கையில் எல்லாவற்றையும் தந்து விடுவதில்லை. அது மனமயக்கம். அதிலிருந்து நான் விடுபடவே விரும்புகிறேன்.''

நான் விக்கித்து நிற்கிறேன்.

செல்வமும், சீரும் சிறப்பும் கொண்ட விசுவநாதனின் வீட்டு மாப்பிள்ளையாகிய ராஜா அந்த மாளிகை வாசத்தின் சுகசொகுசுகளில் இரண்டறக் கலந்துகொண்டு கொஞ்ச மாதங்கள் ஓடிவிட்டன.

**ரா**ஜாவைப் பார்த்து நாளாகிவிட்டது. எப்போது போன் பண்ணினாலும் ராஜா இல்லை என்ற பாட்டுத்தான். ஒரு நாள் இரவு பத்து மணிக்கு ராஜாவிடம் 'என்கேஜ்மெண்ட் பிக்ஸ்' பண்ணிவிட்டு, அடுத்த நாள் காலை அவனைப் பார்க்கச் சென்றேன்.

முகப்பில் அண்ணாவின் காரை டிரைவர் பளபளவென்று துடைத்துக் கொண்டிருந்தான்.

ராஜா பரபரப்பாக வந்தான்.

ட்ரை வாஷின் மடிப்புக் குலையாத உடைகள் மேனியில் டாலடித்தன.

---

கண்ணன் : பாபு உன் பேனா நண்பன் என்றாய். ஆனால் அவன் உன் பக்கத்து போர்ஷனில் குடி இருப்பதாகச் சொன்னீயே!

முரளி : ஆமாம் பக்கத்து போர்ஷன் காரர் அடிக்கடி பேனா இரவல் வாங்க வந்தால் பேனா நண்பர் தானே?

—லலிதா செல்லப்பா



''வாங்க!'' மரியாதைக்கு என்று புரியும் குரலோடு சொல்கிறாள் அண்ணி.

''பெண்கள்ன்னு கொஞ்சம் அழகா இருக்கணும்''கிற ராஜாவின் முந்தைய சொற்கள் என் மனத்தில் இரக்கத்தைச் சுரக்க வைக்கின்றன.

அவன் ரசனைகள் செல்லுபடியாகாத இடத்தில் அவர்களது ரசனைப் பொருளாக அல்லவா அவன் இருந்தான்? அவர்கள் மாளிகைக்கு அணிகலனான மாப்பிள்ளை அல்லவா? அவன் சிரிப்பும் கம்பீரமும், சுறுசுறுப்பும், அங்கு உயிரோட்டமுள்ள குரோட்டன்ஸ் செடிகளைப் போல் அலைபாய்ந்து அனைவரையும் மகிழ்ச்சியில் ஆழ்த்திக் கொண்டிருந்தன. விசுவநாதன் எவ்வளவு மகிழ்ச்சியில் திளைத்திருந்தால் ராஜாவுக்குஇரண்டுபங்களாக்கள், இரண்டு கார்கள், பல ஷேர்கள் எல்லாம் வாங்கித் தந்திருப்பார்!

அண்ணா நல்லவன்: கிடைக்காத வாழ்க்கை கிடைத்ததனால் ஏற்காத ரசனையையும் ஏற்கப் பழகிக் கொண்டான்!

''நான் வரட்டுமா சேகர்!'' என்று பறந்த ராஜா காரை அலட்சியமாகக் கிளப்பினான். ''மறந்துட்டேனே சேகர்! வருகிறாயா டிராப் பண்ணிடறேன்.''

''டிபன் சாப்பிட்டுவிட்டுப் போகட்டுமே'' அண்ணியின் குரலில் உரிமை பாவம் தொனிப்பது தெரிந்தது.

பலகார வகைகளை ஓர் ஆள் எடுத்து வந்தான். என் அருகே இருந்த நாற்காலியில் உட்கார்ந்தவாறே அண்ணி பரிமாறினாள்.

''அந்தப் பெண்ணோட உங்கண்ணாவுக்கு எத்தனை நாட்களாய்த் தொடர்பு?''

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''அதுதான் என்னைப் பெண் பார்க்க வருவதற்கு முன், ஓர் 'அழகான' பெண்ணைப் போய்ப் பார்த்து வந்தீர்களாமே, அவளைப் பற்றித்தான் கேட்கிறேன்.''

''அண்ணாவுக்கு அவளை முன் பின் தெரியாதே...?''

என் சொற்களை இடை வெட்டினாள் அண்ணி. ''இப்பொழுது முன் பின் மட்டுமல்ல, முழுக்கவே தெரியும்.''

நான் அதிர்வில் மௌனியானேன்.

''எனக்கேற்றவரை நான் தேடியிருக்கணும். என் பேராசை என் வாழ்க்கையை இரண்டாம் பட்சமாக்கி விட்டது... ஆமாம். முன்னுரிமை அவளுடையது....''

''என்ன சொல்கிறீர்கள் அண்ணி?''

''புரியவில்லையா சேகர்! தம் அழகை வைத்து என் செல்வத்தை வென்றார். பின் செல்வத்தை வைத்துத் தமக்குரிய அழகிய பெண்ணை ஏற்றுக் கொண்டார். இதற்கு மேல் கேட்க வேண்டாம்.''

அண்ணி தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. ராஜாவா இப்படி? செல்வ மயக்கத்தில் விழுந்து விட்டான் என்ற அதிர்ச்சியை விட எத்தனை பெரிய அடி? மணந்தவளை விட்டு மற்றவளை.... சீ! ராஜாவும் இப்படியா? அவன் ரசனைகளுக்கு இப்படி ஒரு வாய்க்காலா? இப்படி ஒரு நயவஞ்சக நாடகமா?

நான் உறைந்து போனேன்.




## சாண்டில்யன்

### அத்தியாயம் 28

# ஆகாய ராணி

சுதந்திரம் என்பது சுகம். முட்களிடை மலரும் ரோஜா புஷ்பம். இறுதியில் கிடைப்பது சுகமானுல், மணம் வீசும் மலரானுல், இடையில் ஏற்படும் இம்சைகளை ஏற்கலாம். விளைவு விபரீதமானுல், மலரில்லாத வெறும் முட்கள் கொண்ட கட்டையானுல், அது சுதந்திரமாகாது. சுதந்திரம் என்ற பெயரில் கிடைக்கும் புதுத் தளை அது. அது விரும்பத் தக்கதல்ல. அதில் சுகமுமில்லை, சுகத்துக்கான பாதையுமில்லை; நல்லது கூட அளவுடன் இருக்க வேண்டும். சுதந்திரத்துக்கும் இது பொருந்தும். ''அதி ஸர்வத்ர வர்ஜயேத்'' —அதிகப்படியான எதுவும் கைவிடத் தகுந்தது—என்பது சாஸ்திரம்.

மலைப்பாறையில் சிந்துதுர்க்கத்தின் வெளிப்புற அறையின் பக்கத்தில் சாய்ந்து பொய்த் துயில் கொண்ட இந்திரஜித் அனந்தின் மனத்திலும் இத்தகைய எண்ணங்களே ஓடின. அவன் தனது கையால் ராணியின் இடையைச் சுற்றியபோது அவள் ''பெண்களுக்குச் சுதந்திரம் என்பது கிடையாது போலிருக்கிறது'' என்று சொல்லிப் பெருமூச்செறிந்ததையும் அந்தப் பெருமூச்சிலும் இன்பச் சாயை இருந்ததையும் கவனித்த இந்திரஜித் அனந்த், ராணியின் சுதந்திரத்தை மேலும் பறிக்க எண்ணி வளைந்த கையை அதிகமாக இடையில் ஒட்டி அவளை அதிகமாகச் சிறைப்படுத்தினுன்.

அவன் சேஷ்டையைக் கவனித்த ராணி உட்கார்ந்த இடத்திலிருந்து விலகவில்லை. ''கையை எடுக்கிறீர்களா இல்லையா?'' என்று கடுமையுடன் கேட்டாள்.

''எடுக்காவிட்டால்?'' கண்களைத் திறக்காமலே கேட்டான் இந்திரஜித்.

''கையை உடைத்து விடுவேன்.'' ராணியின் குரலில் கடுமை அதிகமாகியது.

இந்திரஜித் அனந்த் கண்களை விழிக்காமலே அவளை நன்ருக நெருங்கி அவள் மடியில் தலையை வைத்துக் கொண்டான். ''இப்போது என்ன செய்வாய்?'' என்று வினவினுன்.

அவள் பதில் சொல்லவில்லை. குனிந்து அந்த துஷ்டனை நோக்கி இதழ்களை விரித்துப் புன்னகை கொண்டாள். ''என்ன கேள்வி இது?'' என்றும் கேட்டாள்.

''ஏன், கேள்விக்கென்ன?''

''அர்த்தமற்ற கேள்வி.''

''இல்லை கை வளைந்தது. அதை உடைப்பதாகச் சொன்னுய். தலை படுத்தது. அதையும் உடைத்துவிடுவாயா என்பதற்காகக் கேட்டேன்.''

இதைக் கேட்ட ராணி அவன் தலைக் குழல்களைக் கோதிவிட்டு ''உங்களுக்கு அதிக சுதந்திரமில்லை போல் தெரிகிறது'' என்ருள் லேசாக நகைத்து.

''இல்லையென்று யார் சொன்னது?'' என்று கேட்டான் இந்திரஜித் படுத்தபடி.

ராணி குனிந்த தலையைச் சிறிது நிமிர்த்தி முகத்தில் விழுந்த குழல்களை விலக்கிக் கொண்டாள். அதைத் தொடர்ந்து, ''கை வளைந்தது என்கிறீர்கள். தலை படுத்தது என்கிறீர்கள். உங்கள் இஷ்டப்படி எதுவும் நடக்காது போலிருக்கிறது?'' என்று வினவினுள்.

இந்திரஜித் அனந்த் கண்களை இறுக மூடிக்கொண்டான் பதிலுக்கு.

''ஏன் கண்களை அப்படி இறுக்க மூடுகிறீர்கள்?'' என்று ராணி கேட்டாள்.

''சுதந்திரம் அடைய.'' இந்திரஜித் பதில் சொன்னுன் திடமாக.

''சுதந்திரத்துக்கும் நீங்கள் கண்ணை இறுக்க மூடிக் கொள்வதற்கும் என்ன சம்பந்தம்?''

''என்னைப் பார்க்காமலிருக்கும்போதே கையும் தலையும் இஷ்டப்படி நடக்கின்றன. என்னைப் பார்த்துவிட்டால் என் கதி அதோகதிதான்.''

ராணியின் கண்கள் பொய்க் கோபத்தைக் கக்கின. அவள் இரண்டு கைகளின் விரல்

களும் அவன் முகத்தில் பதிந்து அவன் கண்களைப் பலவந்தமாகத் திறந்தன.

''இப்பொழுது என்ன செய்வீர்கள்?'' என்ற ராணியின் கண்கள் வலுக்கட்டாய மாகத் திறக்கப்பட்ட அவன் கண்களை நோக்கின, நகைத்தன.

இந்திரஜித்தின் வலிய உதடுகளில் புன்னகை விரிந்தது. ''ஒன்றும் செய்ய மாட்டேன்'' என்று அவன் உதடுகளும் முணு முணுத்தன.

''ஏன்?'' ராணி கேட்டாள் குனிந்த வண்ணம்.

''கண்கள் சுதந்திரமும் போய்விட்டது.''

''ரொம்பக் கெட்டிக்காரர் என்று உங்களுக்கு நினைப்பு?''

''இடையாது. அது போய்ப் பல நாட்களாயிற்று.''

''சரி, எழுந்திருங்கள்.''

''முடியாது.''

''மடியில் படுத்திருக்கிறீர்கள்.''

''தெரியும்.''

''இது பட்டப் பகல்.''

''அப்படியா?''

''ஆம். வெளிச்சம் கூடத் தெரியவில்லையா?''

இந்திரஜித் அனந்த். ''சிறிது தெரிகிறது'' என்றான் மெதுவாக.

''சிறிது என்றால்?'' ராணியும் மெதுவாக வினவினாள் அக்கம் பக்கத்தில் யாருமில்லா திருந்தும்.

''சாதாரண விளக்கின் வெளிச்சம் தெரிகிறது'' என்றான் இந்திரஜித்.

''உளறுகிறீர்கள். சூரிய வெளிச்சம் பலமாயிருக்கிறது.''

''தெரியவில்லை.''

''குருடா நீங்கள்?''

''இப்பொழுது குருடுதான். அதைப் பெரியவர்களே சொல்லியிருக்கிறார்கள்.''

''பெரியவர்களை எதற்காக இழுக்கிறீர்கள்?'' என்ற ராணி சினத்தை வரவழைத்துக்கொண்டாள் குரலில்.

''இந்த மாதிரி நிலைக்கு அவர்கள் பெரிதும் உதவுவார்கள்'' என்றான் அனந்த்.

''எப்படி?''

''காதலுக்குக் கண்ணில்லை என்று அவர்கள்தான் சொல்லியிருக்கிறார்கள்'' என்ற இந்திரஜித் அனந்த் தலையைச் சிறிது புரட்டினான் அவள் மடியில்.

''உம்!'' என்று எச்சரித்தாள் ராணி.

''என்ன உம்?'' என்றான் அனந்த்.

''வெளிச்சமிருக்கிறது என்றேன்'' என்று ராணி எச்சரித்தாள் மீண்டும்.

''அன்றுபோல் செய்துவிடு.''

''என்றுபோல்?''

''அன்று விளக்கு வெளிச்சத்தை மறைக்க உன் குழல்களை இருபக்கமும் திரையாக விடவில்லை?''

அந்த இரவை நினைத்துப்பார்த்தாள்ராணி. அதே நிலைதான் இன்றும். ஆனால் விளக்கு வெளிச்சத்துக்கும் பகலவன் கிரணங்களுக்கும் வித்தியாசமில்லையா என்று நினைத்தாள். ''இது பகல் என்பதை முதலில் தெரிந்து கொள்ளுங்கள்'' என்று சொன்னாள்.

''அதனாலென்ன?'' என்று கேட்டான் இந்திரஜித் அனந்த்.

''இரவல்ல'' என்று அழுத்திச் சொன்னாள் ராணி.

''இரண்டுக்கும் என்ன வித்தியாசம்?'' என்று வினவினான் இந்திரஜித்.

''அதுகூடத் தெரியாதா?''

''எப்படித் தெரியும்?''

''ஏன்? அதிலென்ன கஷ்டம்?''

''குருடனுக்குப் பகல் இரவு இரண்டும் ஒன்றுதானே?''

இதைக் கேட்ட ராணியின் கோபம் முன்னை விட அதிகமாயிற்று. ''பலேபேர்வழி நீங்கள் இங்கு யாரும் இல்லை என்ற துணிச்சல்'' என்று கூறி அவன் தலையைத் தூக்கி அவனை உட்காரவும் வைத்தாள். திரும்பி அவன் மீது விழுந்துவிடும் நிலையில் அரை குறையாகப் பாறைச் சரிவில்





ந' கார்ந்தான் அனந்த் கண்களைக் கசக்கிக் கொண்டு. ''இருக்கிறார்கள்'' என்ற ஒரு வார்த்தையை மட்டும் உதிர்த்தான் தலையை ஒருமுறை உலுப்பிவிட்டு.

ராணியின் கண்களில் கேள்விக் குறி எழுந்தது. அடர்ந்த கருத்த புருவங்கள் சிறிது மேலே ஏறின. அவற்றின் இடையில் இருந்த சிறு இடத்தில் மூன்று சுருக்கங்கள் மிக அழகாக உரு எடுத்தன. ''இருக்கிறார்கள்?'' என்றும் கேட்டாள் ராணி.

''ஆம்'' என்றான் இந்திரஜித்.

''யார்?'' ராணியின் கேள்வியில் உஷ்ணம் இருந்தது.

''நமது நண்பர்கள். ஆனால் உன்னைப் பார்த்திருக்க மாட்டார்கள்.''

''ஏன்?''

''பாறையின் அப்பாலிருக்கும் குழியில் படுத்திருக்கிறார்கள்.''

இதைக் கேட்ட ராணி சட்டென்று எழுந்திருந்து அறையைச் சுற்றிச் சென்றாள். அறைக்குப் பின்பு இருந்த இரு [illegible] பாறைகளுக்கும் இடையிலிருந்த பள்ளத்தில் காப்டன் ஸ்டாண்டனும் லெப்டினண்ட் ஸ்மித்தும் கைகால் கட்டப்பட்டு உருண்டு கிடந்தார்கள். அவர்களைக் கண்ட ராணி பல விநாடிகள் பிரமித்து நின்றாள். ''இப்படி வாருங்கள். உங்களைத்தான்'' என்று பெரிதாகக் குரல் கொடுத்தாள்.

அந்த அழைப்பு தனக்குத்தான் என்பதை உணர்ந்த அனந்த் எழுந்து அவளிருக்கும் இடத்தை அடைந்தான். ''இவர்கள் கட்டுகளை அவிழ்த்து விடுங்கள்'' என்று ராணி உத்தரவிட, அதை அனந்த் நிறைவேற்றியதும் ஸ்டாண்டனும் ஸ்மித்தும் மெள்ள எழுந்து நின்றார்கள். ஆனால் இருவரும் பேசவில்லை. ''இவர்கள் எப்படி இங்கு வந்தார்கள்? ஏன் வந்தார்கள்? சிறையிலிருந்து எப்படித் தப்பினார்கள்?'' என்று கேள்விகளைச் சரமாரியாகத் தொடுத்தாள் ராணி.

இந்திரஜித் அனந்த். "ரத்னு!" என்று ராணியின் பெயரைச் சொல்லிப் பேச்சைத் துவக்கியதும் இரு வெள்ளையரும் சுற்று முற்றும் பார்த்தார்கள்.

"என்ன பார்க்கிறீர்கள்?" என்று கேட்டான் இந்திரஜித்.

"ரத்னு யார்? எங்கே?" என்றான் ஸ்மித்.

"அதைப் பற்றிக் கவலையில்லை. இங்கு எப்படி வந்தீர்கள்?" என்று வினவினள், ராணி.

"படகில் வந்தோம்." என்றான் ஸ்டாண்டன்.

"எந்த படகு?"

"பாண்டவகட் கரையில் இருந்தது." என்றான் ஸ்டாண்டன்.

"உங்களை யார் விடுதலை செய்தது?"

"சிறை என்று ஏதுமில்லை. எங்கள் காயம் ஆறிவிட்டதால் டாக்டர் நடக்கச் சொன்னார்" என்றான் ஸ்மித்.

"அதுதான் தவறு" என்றான் இந்திரஜித்.

"எது?" ஸ்டாண்டனின் குரலில் எரிச்சல் இருந்தது.

"காயத்தை டாக்டர் ஆற்றியது, கட்டைப் பிரித்தது, நடக்கச் சொன்னது" என்று விளக்கினன் இந்திரஜித்.

"சரி, பிறகு என்ன நடந்தது?" என்று ராணி கேட்டாள்.

"இங்கு நீங்கள் வருவீர்கள் என்று நினைத்தோம்" என்று ஸ்டாண்டன் சொன்னன்.

"ஆம். வந்தேன்" என்றான் ராணி. அவன் குரலில் உக்கிரம் அதிகமாக இருந்தது.

அந்தச் சமயத்தில் இடைபுகுந்த இந்திரஜித் "கவலைப்பட வேண்டாம். உன்னை இவர்கள் பார்க்கவில்லை" என்றான்.

"எப்படித் தெரியும் உங்களுக்கு?" என்று வினவினன் ராணி.

"நீ நீந்தப் போனதும் இவர்கள் இங்கு படகில் வந்தார்கள். அதற்குச்சற்று முன்பு நான் வந்தேன். நிம்மதியாக உறங்கலாமென்று. இவர்கள் முதல் தடவை போல் நிம்மதியைக் குலைக்கப் போகிறார்கள் என்று கட்டி இந்தப் பள்ளத்தில் உருட்டி வைத்தேன்" என்று விளக்கினன் இந்திரஜித்.

இந்திரஜித்தை ஏதோ கேட்க வாயெடுத்த ராணி சட்டென்று அடக்கிக் கொண்டாள். அனந்த் அவர்களை நோக்கி "இனி நீங்கள் பாண்டவகட் போகலாம். இல்லையேல் இன்றிரவு சிவாஜி மகாராஜாவுக்கு அபிஷேகம் இருக்கிறது. அதைப் பார்க்க சிந்து துர்க்கத்தில் தங்கலாம்" என்று கூறினன்.

"வீ டோண்ட் ரிகெக்னைஸ் சிவாஜி ஆஸ் எ மகாராஜா" (நாங்கள் சிவாஜியை மகாராஜாவாக ஒப்புக்கொள்ளவில்லை)" என்ற ஸ்டாண்டன் தனது வெப்பிநெண்டைப் பார்த்தான்.

"இல்லை" என்பதற்கு அடையாளமாக ஸ்மித்தும் தலையை விடுவிடுவென்று ஆட்டினன்.

"சரி. அப்படியானல் பாண்டவகட்டுக்குப் போங்கள்" என்றான் அனந்த்.

இரு வெள்ளையர்களும் முனகிக்கொண்டு கோட்டைச் சுவரின் ஒரு பக்கத்தை நோக்கி நடந்து மறைந்தார்கள். சில விநாடிகளில் மீண்டும் ஓடிவந்து "எங்கள் படகைக் காணும்" என்று கூறி அனந்தைச் சுடும் விழிகளால் நோக்கினர்கள்.

"ஐ ஆம் ஸாரி" என்றான் அனந்த்.

"வாட் டிட் யூ டு வித் தட் போட் (அந்தப் படகை என்ன செய்தாய்?)" என்று வினவினன் ஸ்டாண்டன்.

"அனுப்பிவிட்டேன்" என்றான் அனந்த்.

"எங்கே?"

"பாண்டவகட் கரைக்கு."

"இப்பொழுது நாங்கள் எப்படிப் போவது?" என்று வினவினன் ஸ்மித்.

இந்திரஜித் தீர்க்காலோசனையுடன் தனது முகவாய்க்கட்டையைத் தடவிக் கொண்டான். "ஆல் ரைட் கம்" என்று இருவரையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு மலைச் சரிவில் இறங்கினன். சட்டென்று திரும்பி ஒவ்வொருவராகத் தூக்கிக் கடலில் விட்டெறிந்தான். அந்த அசுரச் செயலைப் பார்த்துக் கொண்டு நின்றிருந்த ராணியிடம் வந்து, "டோண்ட் ஒர்ரி. ஸீ! தே ஸ்விம் லைக் பிஷ் (கவலைப்படாதே. பார் அதோ அவர்கள் மீனைப் போல் நீந்துகிறார்கள்)" என்று கடலில் நீந்திச் சென்ற காப்டனையும் ஸ்மித்தையும் காட்டினன்.

ராணியின் முகத்தில் விவரிக்க இயலாத பிரமை இருந்தது. "அந்த இருவரையும் அத்தனை லாகவமாக எப்படித் தூக்கினீர்கள்?" என்று வினவினள் பிரமை குரலிலும் ஒலிக்க.

"இப்படித்தான்" என்றான் அனந்த். அடுத்த விநாடி ராணி அவன் இரு கைகளில் ஒன்றாக உயர்ந்தாள். பிறகு ஏதோ இரண்டு இரும்புத் தூண்கள் தன்னை அந்தரத்தில் தாங்குவது போன்ற உணர்ச்சி ராணிக்கு ஏற்பட்டது. அவளைத் தலை நிமிர்ந்து நோக்கிய அனந்த், "இப்பொழுது நீ கடல் ராணி அல்ல" என்றான்.

அந்தரத்தில் இருந்து அவனை நோக்கிய ராணி "அப்படியானல் நான் யார்?" என்று வினவினள்.

"ஆகாய ராணி" என்றான் அனந்த்.

அது உண்மை என்பதையும் நிரூபித்தான். திருப்பணத்தின் முறை படு பயங்கரமாக இருந்தது. (தொடரும்)

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

"உனக்காக உயிரையும் கொடுப்பேன் கண்ணே!"

"நல்ல வேளை! இந்த மருந்தைக் குடிக்க நீங்க ரொம்ப அடம் பிடிப்பீங்களோன்னு நெனைச்சேன்."

—எஸ். சங்கர நாராயணன்



# செத்தாலாவது வாழுவோம்

சு. சமுத்திரம்

ஆலமரத்துப் பிள்ளையார் கோவிலுக்கருகே, ராமலிங்கம் வந்தபோது, அங்கே பேசிக்கொண்டிருந்த நாலைந்து விவசாயிகளில் ஒருவர், ''கிராம சேவிக் ஐயா... ஒங்களைத்தான் தேடிக்கிட்டு இருக்கேன். கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது மாதிரி வந்துட்டிய...'' என்றார். இன்னொரு டிராக்டர் விவசாயி ''அவரை கிராம சேவக்குன்னு சொல்லாதே மச்சான்.. இப்போது அவரோட உத்தியோகத்துக்கு ஊர்நல அதிகாரின்னு பேராக்கும்'' என்றார்.





ராமலிங்கம், ''நீங்க வேறே... பேருபெத்தபேரு... வீடு பட்டினி...! பழைய கருப்பன் கருப்பனேங்கற சமாசாரந்தான். இப்போ பேசிக்கிட்டு இருக்க நேரமில்ல... யூனியன் கமிஷனர் அவசரமா வரச்சொல்லியிருக்கார்... போய்க்கிட்டே இருக்கேன்'' என்றார்.

''பொழுது சாஞ்ச நேரத்தில அப்படி என்ன வேலை?''

''கமிஷனர் வரச் சொன்னாராம். எதுக்குன்னு எனக்கும் புரியல...''

''ஒங்க கமிஷனரு காரணமில்லாமக் கூப்புட மாட்டார்... நீங்க நம்ம ஹரிஜனன் ராமசுப்புக்கிட்ட விவசாயத் தொழிலாளிக்குக் குறைந்த பட்சக் கூலி சட்டப்படி ஏழே கால்ரூபாய். ஆறு ரூபாய் கொடுத்தா வாங்காதேன்னு சொன்னியளா?''

''சொன்னேன்.''

''நம்ம கண்டிராக்டர் வீடே கட்டல. அவர் கேட்டிற சிமெண்டைக் கொடுக்காண்டாமுன்னு கமிஷனர் காதைக் கடிச்சியளா?''

''கடிக்கல... சத்தம் போட்டுச் சொன்னேன்.''

''அங்கதான் விஷயமே இருக்கு...! மிராசுதார் கிருஷ்ணசாமியும், காண்டிராக்டரும் போன வாரமே கலெக்டரைப் பார்த்து உங்களைப் பத்தி எதையோ எழுதிக் கொடுத்தாங்களாம்.. எனக்கு என்னமோ..''

''இவன் எவண்டா இவன்... கிராம சேவக்கையா... நீங்க கவலைப்படாமப் போங்க.''

''எனக்காகக் கவலைப்பட நீங்க இருக்கும் போது நான் எதுக்காகக் கவலைப்படணும்?'' ராமலிங்கம் துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு, பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்துக்குப் போனார். விஸ்தரிப்பு அதிகாரி முதல், ஆபீஸ் பியூன் வரை அனைவரும் அவரை அனு



தாபத்துடன் பார்த்தார்கள்; கமிஷனரை அவர் சீக்கிரம் பார்க்கட்டும் என்பது போல், வராந்தாவில் கும்பலாக நின்றிருந்த அவர்கள் அவருக்கு வழி விட்டார்கள்.

கமிஷனர் அவரைப் பார்த்ததும், நாற்காலியை நகர்த்திக் கொண்டே ''ஐ ஆம் ஸாரி மிஸ்டர்.... ஒங்கள பட்டியாம்பட்டி யூனியனுக்கு மாத்தியிருக்காங்க.... பி.ஏ. பிடிக்கு, கால் போட்டுச் சொன்னேன். கலெக்டரே போட்ட ஆர்டராம். மாத்த முடியாதாம்.''

ராமலிங்கத்தால் முதலில் மூச்சுக்கூட விட முடியவில்லை.

''ஸார்.... இந்த இடத்துக்கு வந்து ஒரு வருஷம் கூட ஆகல்ல. அதுக்குள்ள மாத்துறதாய் இருந்தால் என்ன ஸார் அர்த்தம்... நான் என்ன தப்பு ஸார் பண்ணினேன்?''

''நீங்க தப்புப் பண்ணி யிருந்தால் ஒங்கள மாத்தியிருக்க மாட்டாங்க. நீங்க விவசாயத் தொழிலாளிகளைக் கிளர்ச்சி பண்ணும்படியா தூண்டி விடுகிறதாக் கலெக்டர் கிட்ட மனுப் போயிருக்கு... மாத்திட்டார். ஐ ஆம் ஸாரி. சத்தியமாய்ச் சொல்றேன். ஒங்களவிட எனக்குத்தான் வருத்தம்.''

''ஸார்! இந்த டெவலப்மெண்ட் இலாகாவுல சேர்ந்து இருபது வருஷமாகுது. இதுக்குள்ள முப்பது இடத்துக்கு மாத்திட்டாங்க. அப்பா மெட்ராஸ் ஆஸ்பத்திரியிலே சாகக் கிடக்காரு... மனைவி நோயில கிடக்காள். சொந்தத் தம்பி கிட்டச் சொல்ற மாதிரி சொல்றேன். அன்றாடம் சாப்பாட்டுக்கே கஷ்டமாய் இருக்கு... அப்பாவுக்காக வாரத்துல இருபது ரூபாய் ஆயுது. அவனுக்கு சிஸேரியன் ஆபரேஷனைச் சரியாச் செய்யாததுனால குடல் சரிஞ்சிருக்கிறதா டாக்டர் சொல்றாரு... அவளை ஜிஹெச்லே சேர்க்கலாமுன்னு இருக்கேன். இதுக்காகவே கிரேட் ஒன்னுக்கு புரமோட் பண்ணி டிரான்ஸ்பர் செய்தப்ப, புரமோஷன் வேண்டாமுன்னுட்டேன். இது தெரிஞ்சும் என்னை மாத்துனால் நான் என்ன சார் பண்றது?''

''நான் என்ன பண்ணட்டும்?''

''இது அநியாயம் ஸார். பேமலி வெல்பார்ல முப்பத்தாறு பேர் டார்ஜெட் கொடுத்
இங்க..... 58 கேஸ் பிடிச்சிருக்கேன். சிறு சேமிப்புக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்திங்க. ரெண்டாயிரத்து நூறு வாங்கிக் கொடுத்திருக்கேன். பதினைஞ்சு கம்போஸிட் குழி போட்டிருக்கேன். ஒரு கோபர் கேஸ் பிளாண்டுக்குப் பதிலா அஞ்சு பிளாண்ட் போட்டிருக்கேன். நான், என்ன சொல்லி... என்ன செய்யல... நீங்களே சொல்லுங்க ஸார்.''

''நான் என்ன பண்ணட்டும்... அந்தக் காலத்திலேயே 'காய்ச்ச மரத்துலதான் கல்லு விழு'முன்னு பழமொழி இருக்கு. காய்ச்ச மரத்துல பழம் பறிக்கிறவன் மேல கல் விழுறதா ஒரு மொழியும் இல்ல. என்ன பண்றது..... நீங்களும் நானும் வேல செய்யறதுல மாடாய் இருக்கோம். காக்காயாய் மாற முடியல... இந்தக் காலத்துல உழைக்கிறவன் அதிகமாய் உழைக்கிறதா உபத்திரவமாய் நினைக்கிறாங்க... மிராசுதாரையும் கண்ட்ராக்டரையும் பகைச்சுக்கிட்டீங்க. அவங்க சங்கை ஊத வேண்டிய இடத்தில ஊதி உங்களை....''

''ஸார்.... நான் உங்களத்தான் நம்பியிருக்கேன்.''

''ஆல் ரைட்.... நீங்க ஒரு மாதம் லீவு போடுங்க. நான் சாங்ஷன் பண்ணிடுறேன். மனிதாபிமானத்தைக் கருதி, மாற்றல் உத்தரவை ரத்து செய்யும்படியாய் ஒரு மனுக் கொடுங்க. நான் ஸ்ட்ராங்கா எழுதறேன்... என்னத்த எழுதி என்ன பிரயோஜனம்? எங்க நியாயம் இருக்கு?''

ராமலிங்கம் தான் படும் கஷ்டங்களைச் சுட்டிக் காட்டி, அங்கிருந்து மாற்றப்பட்ட இடத்துக்குப் போனால் குடும்பத்தில் ஏற்படும் சிக்கல்களையும் கோடி காட்டி, அங்கேயே விடுமுறை விண்ணப்பத்தையும், கருணை மனுவையும் கொடுத்துவிட்டு, சலிப்போடு வெளியே வந்தார்.

ராமலிங்கம் எஸ். எஸ். எல். ஸி. படித்ததற்கு இந்த ஆண்டு வெள்ளி விழா நடத்தலாம். அவர் கிராமத்தில் முதன் முதலாக எஸ். எஸ். எல். ஸி. படித்த ஐந்தாறு பேரில் அவரும் ஒருவர். அவரைத் தவிர, இதர எஸ். எஸ். எல். ஸி.க்காரர்கள் தாலுகா அலுவலகங்களில் கிளார்க்குகளாகச் சேர்ந்து, இன்று பல கிளார்க்குகளை வைத்து வேலை வாங்கும் அதிகாரிகளாக இருக்கிறார்கள். ஆனால் இந்த மனிதர் கிராம முன்னேற்றம், சமூக சேவை என்று பத்திரிகைகளிலும், அப்போதைய அமைச்சர்களின் வாய்களிலும் அடிபட்ட வார்த்தைகளில் மயங்கி, பஞ்சாயத்து யூனியன் ஆபீசில் கிராம சேவக்காகச் சேர்ந்தார். அவரது இயல்பான பற்றற்ற ஒரே நிலையான குணத்தைப் போல் அதிகாரிகளின் வயிற்று வேகத்துக்கும் 'ஈகோ'வுக்கும் தீனி போட முடியாத இவரது உத்தியோகமும் ஒரே நிலையில் இருந்தது.

வேலையில் சேர்ந்த ஒரு வருடத்துக்குள்ளேயே அலுவலகத்துக்கு வருகை தரும் மேல் அதிகாரிகளிடம் உள்ளதை உள்ளபடி சொல்லி, அவர்களது சினத்தையும் யூனியன் அதிகாரிகளின் வெறுப்பையும் சம்பாதித்துக் கொண்ட இவர், ஒரு சமயம் லட்சிய மரத்தின் உச்சாணிக் கிளைக்குப் போய் அங்கே இருந்து உலுக்கப்பட்டுக் கீழே விழுந்தார்.

அவர்: அருவி மாதிரி 'ஜோ'ன்னு மழை பெய்யுது... நீங்க பாட்டுக்குக் குடை கூட இல்லாம எங்கே ஸார் போறீங்க...?''

இவர்: ''காணாம போன என் எருமை மாட்டைத் தேடிட்டுப் போயிட்டிருக்கேன்...!''

இ. பூபாலசிங்



விழுந்தவர் விழுந்தவர்தான். இன்னும் எழவில்லை. அதாவது பஞ்சாயத்துக் கவுன்சில் ஹாலில் கூடிய கூட்டமொன்றில் ஒரு தலைவர், 'பாரதம் கிராமங்களில் வாழ்கிறது என்பதை மறக்கக் கூடாது' என்றபோது, இவர் 'ஆனால் நாம் கிராமங்களில் சேரிகள் செத்துக் கொண்டிருப்பதை மறந்துவிட்டோம்' என்று ஆவேசமாகச் சொன்னபோது அந்த ஆவேசத்தில் ஆக்ரோஷமான அதிகாரிகளால் அவரது அந்தரங்கக் குறிப்பேடு விலங்கமாகியது.

இப்படிப்பட்டவர் காதலிக்காமலாவது இருந்திருக்கலாம். சொல்லப் போனால் அவர் காதலிக்கவே இல்லை. ஏகப்பட்ட சொத்திருந்த ஒரு பஞ்சாயத்துத் தலைவரின் வீட்டுக்கு உத்தியோக ரீதியாகப் போய்க் கொண்டிருந்த அவரை, அந்தத் தலைவரின் மகள் கண்ணால் அடித்தாள். இவருக்கும் ஆசை வரப் பார்த்தது. உடனே பயந்து போய், சொல்லாமல் கொள்ளாமல் வேலையை வேறொரு யூனியனுக்கு மாற்றிக் கொண்டு அவர் போனபோது, அங்கே அவரை வரவேற்றது அந்தப் பெண். பஸ் நிலையத்திலேயே நின்றிருந்தாள். இவர் எவ்வளவு சொல்லியும் அவள் கேட்கவில்லை. திருமண விபத்துக்கு உள்ளாக்கப்பட்டார். மனைவி போட்டிருந்த முப்பது பவுன் நகைகளை இவர் பஞ்சாயத்து மாமாவிடம் சேர்த்து விட்டு, லட்சிய இல்லத்தில் இறங்கினார். மகனுக்கு வசதியான இடத்தில் கல்யாணம் செய்து, இதர பிள்ளைகளையும் கரையேற்றக் கனவுக் கண்டு கொண்டிருந்த இவரது தந்தை, பிள்ளை வேறு ஜாதியில் திருமணம் செய்ததை அறிந்து, கொதித்து தந்தையே மகனுக்குக் 'கொள்ளி' வைத்தார். மகன் செத்துப் போய்விட்டதாக அவர் பகிரங்கமாக அறிவித்தபோது, பஞ்சாயத்து மாமாவும் சம்பந்திக்குத் தானும் இளைக்காதவர் என்பது போல் மகளின் ஆடைகளை நெருப்பில் போட்டு அவரும் 'கொள்ளி' வைத்தார்.

எப்படியோ காலம், அந்தத் தம்பதியருக்கு 'கொள்ளிக்' கண்களைக் காட்டியது. பொதுவாக, கிராம சேவக்குகள் ஆசிரியைகளை மணந்து கொண்டு 'டபுள்' சம்பளத்தில் உருவங்களும் 'டபுளாக' இப்போது கமிஷனர்களாக மாறியபோது, 'கமிஷன்' வாங்காத ராமலிங்கம் கண்ணேறுபடும் அளவுக்கு அப்படியே இருந்தார். சமீபத்தில்தான் நோய்ப்பட்ட தந்தையைக் கிராமத்தில் போய்ப் பார்த்து கட்டிப்பிடித்து அழுதுவிட்டு, பிறகு அவரைப் பெரிய ஆஸ்பத்திரியில் சேர்த்தார்.

ஒரு மாத விடுமுறையும் ராமலிங்கத்துக்கு ஓய்வு கொடுக்காமலேயே ஓய்ந்தது. குடும்ப நிலையை எத்தனையோ பேரிடம் எடுத்துக் கூறினார். அப்பாவை ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கும் 'அட்மிஷன்' ரசீதையும் மனைவிக்கு 'மேஜர் ஆபரேஷன்' தேவைப்படும் என்று ஒரு டாக்டர் கொடுத்த நிஜமான சர்டிபிகேட்டையும் இணைத்து மீண்டும் கருணை மனுப் போட்டார்.

அவருடைய கருணை மனுவுக்குப் பலன் கிடைக்கவில்லையானாலும், பதில் கிடைத்தது.

கமிஷனர், அவரைப் பார்க்க அவர் வீட்டுக்கே வந்தார். உடன் பிறந்த சகோதரன் போல் ராமலிங்கத்தைக் கட்டிப் பிடித்துக் கொண்டே, "ஐ ஆம் ஸாரி தம்பி... நீங்க உடனே வேலையில் சேரா விட்டால் உங்க மேலே ஒழுங்கு நடவடிக்கை எடுக்கச் சொல்லி உத்தரவு வந்திருக்கு.... நானும் உங்களுக்கு உடந்தைன்னு சொல்லி எனக்கும் மெமோ வந்திருக்கு.... நாளைக்கு வந்து ரிலீவிங் ஆர்டரை வாங்கிக்கிறீங்களா?" என்றார்.

மறுநாள் ராமலிங்கம் பஞ்சாயத்து யூனியன் அலுவலகத்துக்குப் போய், ரிலீவிங் ஆர்டரை வாங்கிக் கொண்டார். அவருக்காக வைத்திருந்த பிரிவுபசார நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள மறுத்து விட்டார். யூனியன் கட்டிடத்துக்கு வெளியே வந்தவர், ஒரு விவசாயியின் வேண்டுகோளை ஞாபகப்படுத்திக் கொண்டு, டிப்போவில் போய், ஒரு டின் பூச்சி மருந்தை வாங்கினார்.

இரவுப் பொழுது பகலை விழுங்கிக்கொண்டிருந்தது.

வீட்டின் உள்ளறையில் வைத்திருந்த பூச்சி மருந்து டின்னை உரியவரிடம் சேர்ப்பிப்பதற்காக எடுத்தார்.

திடீரென்று ஒரு யோசனை.

இத்தனை ஆண்டு நேர்மையுடனும், நியாயத்துடனும் வாழ்ந்து என்னத்தைக் கண்டோம்? நியாயம் செத்துவிட்ட காலத்தில் எதற்காக வாழவேண்டும்? கழுதையும் குதிரையும் ஒன்றாகக் கருதப்படும் இந்த டிபார்ட்மெண்டில் எதற்காக இருக்க வேண்டும்? மனைவியை நல்ல விதமாகப் பராமரிக்க முடியவில்லை. அவள் வயிற்றுக்குள் குடல், அவர் மனம் மாதிரி சரிந்து கொண்டு வருகிறது. கடைசிக் காலத்தில் மகனைப் பார்த்துக் கொண்டே கண் மூடலாம் என்று ஆஸ்பத்திரியில் தவம் கிடக்கும் தந்தையை வாரத்துக்கு ஒரு முறை கூடப் பார்க்க முடியாது. நம்பி இருப்பவர்களை வாழ வைக்க முடியாத அவர் ஏன் வாழ வேண்டும்? அப்படியானால்.....மனைவி மக்களின் கதி?

திடீரென்று இன்னொரு நினைவு.

இன்று முன்னைவிடப் பெருமளவு வசதியாக வேறொரு மாவட்டத்தில் இருக்கும்



இந்தியாவில் பிறந்தாலும் அமெரிக்காவில் வளர்ந்து எட்டு வயதாகி நிற்கும் சிறுவன் ராஜேஷ் நாயர். என் நண்பர் வீட்டிற்கு வந்திருந்த அவருடைய உறவினரான அந்தப் பையனுக்கு டபுள் செவன் வாங்கிக் கொடுத்தார் நண்பர். அதை வாங்கிப் பாதி குடித்த அந்தப் பையன் மீதியைத் தன் அம்மாவிடம் கொடுத்துவிட்டு, "ஐ ஃபினிஷ்ட் ஒன் செவன்; யூ டேக் தி அதர் செவன்" என்று பட்டென்று ஒரு ஜோக்கும் அடித்தான்!

— முத்து

# ஒரு மரத்துப் பறவைகள்

மாற்றான் மனைவியைப் பெண்டாளல்-அதனால் ஆத்திரப்பட்டு வரும் கணவனையும் மனைவியையும் கொல்வது — அவர்கள் குழந்தைகள் அநாதையாகித் திசைக் கொன்றாகப் பிரிந்து பெற்றோரைக் கொன்றவனைப் பழிவாங்க அலேதல். சகோதரர்கள் என்று தெரியாமலே சந்தித்துப் பழகுதல், சண்டை போடுதல். —அதனிடையே இரட்டை வேடம் வேறு. ஒருத்தி பட்டிக்காடு; மற்றொருத்தி அல்ட்ரா மாடர்ன் — ஸ்ரீப்ரியாவுக்கு ஏற்ற பாத்திரம். இனங்கண்டு கொண்டு கதை முடிய மச்சத்துக்குப் பதில் அம்மாவின் தாலியைத் தாயத்துப்போல் கட்டிக் கொண்டிருக்கிறார்கள் கைமுண்டாவிலே.

ஸ்ரீகாந்துக்கு மாறுபட்ட பாத்திரம். இரு சகோதரரில் தம்பியாக — வில்லத்தனமில்லாமல், கள்ளமில்லா உள்ளத்துடன் ஸ்ரீப்ரியாவை அண்ணியாகக் கருதி நன்றாகவே நடித்திருக்கிறார். அதற்குப் பலன் அண்ணி போலவே உருவ அமைப்புள்ள இன்னொரு ஸ்ரீப்ரியா மனைவியாகக் கிடைத்து விடுகிறார்.

இரட்டை வேட ஸ்ரீப்ரியாவின் இரண்டு காதல்களுமே படு செயற்கையாக இருக்கின்றன. ஒண்ட வந்த அன்னியனிடம், ஒரே இரவில் முதலிரவை அனுபவிக்கத் துணிவாளா எந்தப் பெண்ணாவது? அண்ணியாக நினைக்கும் ஓர் ஆண்மகனிடம் — அவன் அண்ணிக்குச் சித்தப்பிரமை என்று சமாதானம் செய்துகொண்ட போதிலும் — ஒரு பெண் அவ்வளவு அப்பட்டமாகவா பழகுவாள்— சினிமா உலகில் மட்டுமே காணக் கூடியவை.

மனோரமாவும் சுருளியும் தில்லானா மோகனாம்பாள் பாணியில் காதலர்களாகத் தோன்றுவது மனநிறைவைத் தருகிறது.

நிறையவே சண்டைகள் இருக்கின்றன. அசோகனும் இருக்கிறார். கௌரவ நடிகராக வருகிறார் விஜயன். மாடிப்படி உருளல் தேவலாம்.

கதை தர்மலாம் — வசனம் கலைமணியாம்!

இசை சங்கர் கணேஷாம். 'ரா'வன்ன சங்கரன் சிரமப்பட்டிருக்கிறார் டைரக்டராக.

ஒரு மரத்துப் பறவைகள் பறக்கவில்லை.

—கௌசிகன்

அவர் மாமனாரை, இவருக்குப் பத்தாண்டுகளுக்குப் பின்னால் சேர்ந்து, இப்பொழுது விவசாய விஸ்தரிப்பு அதிகாரியாக வேலை பார்த்தவர், பார்த்தாராம். பார்த்த கையோடு ''ஒங்க மகளும் பேரன் பேத்திகளும் ரொம்பக் கஷ்டப்படுறாங்க... கொஞ்சம் உதவக் கூடாதா'' என்று கேட்டாராம். அதற்கு அந்த மாமனார் ''அவன் செத்தா போய்விட்டான்... நான் என் மகளுக்கு உதவறதுக்கு?'' என்று திருப்பிக் கேட்டாராம்.

ஒருவேளை.. நான் செத்தால்.. இந்தப் பிள்ளைகளும் அவங்களைப் பெற்றவளும் வாழ லாமோ... மாமனார்... அவர்களைக் கூட்டிக்கொண்டு போய் வாழ வைக்கலாம். அதோட தந்தையை வரவேற்கத் தான் ஏன் முந்திக்கக் கூடாது?

ராமலிங்கம், பூச்சி மருந்து டின்னின் வாய்ப் பக்கத்தை, ஓர் ஆணியை வைத்து அடித்து ஓர் ஓட்டையை உண்டாக்கினார். 'கடவுளே என்னை மன்னிச்சுடு... இந்த நாற்பத்திரண்டு வயசில் பிறத்தியார் பொருளை இப்போதுதான் சாப்பிடுறேன்' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டே அந்த டின்னில் மரணப் பொந்தை அவர் வாய்க்கு அருகே கொண்டு போனபோது—

வீட்டுக்கு வெளியே, ஏதோ ஒரு மூலையில் இருந்து வந்த எருமை மாடு ஒன்று, யாரோ பின்னால் ஏறி உட்கார்ந்திருப்பது போல், முதுகைச் சிலிர்த்துக் கொண்டது.

படவிமரிசனம்







**எந்தைஎன் குருவே என்உயிர்க்கு உயிரே**
**என்இரு கண்ணின்உள் மணியே**
**இந்துறும் அமுதே என்உயிர்த் துணையே**
**இணையிலா என்னுடை அன்பே**
**சொந்தநல் உறவே அம்பலத்து அரசே**
**சோதியே சோதியே விரைந்து**
**வந்துஅருள் என்றேன் வந்துஅருட் சோதி**
**வழங்கினை வாழிநின் மாண்பே!**

— திருஅருட்பா

அந்தக் கல்யாணப் பத்திரிகையை அவர்கள் எனக்கு அனுப்பி யிருக்கவேண்டியதே இல்லை. எப்படியோ என்னுடைய முகவரியைத் துருவித் தேடி அறிந்து அனுப்பியிருக்கிறார்கள். இதில் ஏதோ ஒரு விஷமத்தனமும் கலந்திருப்பதாக மனம் குடைகிறது.

'சாந்தினி ராஜகோபாலன்' — சிரிப்பு வருகிறது. இந்தச் சாந்தினியை எனக்கு மிக நெருக்கமாகவே தெரியும். ஆனால் உமாவிடம் சொல்லிக் கொள்ளக் கூடிய முறையில் இல்லை. தெரியக் கூடாத அளவில் தெரியும்.

பத்தாண்டு காலமாய், மனசில் முள்ளாய், கண்ணுடிச் சில்லாய் நெருடி ரத்தம் வடிய வைக்கிற ஒரு பெயராயிற்றே! மனைவி களங்கமற்றவள் என்று எண்ணிக் கணவன் அடைகிற பெருமிதத்தை விடக் கணவன் தனக்கு மட்டுமே உரியவன் என்ற நம்பிக்கையில் மனைவி அடைகிற கௌரவம் எவ்வளவு அற்புதமானது!

உமா இந்த ஒன்பதாண்டு காலமாய் அப்படியொரு பெருமிதக் கிளர்ச்சியில்தான் பொங்கிப் பூரித்திருக்கிறாள். முப்பது வயதிலும் குழந்தையாய் இருக்கிற இந்த உமா இவளுடைய கணவன் அப்படியொன்றும் ராமனாய் இருக்கவில்லை என்கிற உண்மையின் வெப்பத்தை என்றாவது தாங்கிக் கொள்ள முடியுமா?

மதுரை நிகழ்ச்சியின் நினைவு திரும்பிப் பாதையை மறைப்பது போல் ஒரு பிரமை. கட்டைப் பிரும்மச்சாரியாய் லாட்ஜில் தங்கிப் பொறுப்பற்றுத் திரிந்த ஒரு காட்டாற்றுக் காலத்தில் இவள் அறிமுகமானாள். ஒரு சின்னப் பொடியன் இந்தச் சாந்தினியின் அந்தப்புரத்துக்கு வழி காட்டியபோது எனக்கு அது மிகப் பெரிய சாதனை. மற்ற நண்பர்களின் மத்தியில் நானும் சமமாக நடை போட அந்தச் சாதனை அன்றைக்கு உதவியது.

நிலவின் பெயரே களங்கப்பட்ட மாதிரி அவளுடைய பெயர் சாந்தினி. அந்த நிலவின் உறவால் என்னுள் ஏற்பட்ட நிரந்தரமான கறை?

இத்தனை நாட்கள் கழித்தும் கொஞ்சமும் மறையாமல் உள்ளே கிடந்த அந்தக் கறை இப்போது விசுவரூபமெடுத்து விட்டது.

காய்கறிகளை என்னிடமிருந்து வாங்கிக் கொண்டே உமா என்னிடம் கூறினாள்: ''உள்ளே வாங்கோ. என்னோட ஒண்ணுவிட்ட சித்தப்பான்னு சொல்லுவேனே அவர் வந்திருக்கார். நம்ம கல்யாணத்துக்கு வந்தவர் இப்போதான் வந்திருக்கார்...''— பரஸ்பர அறிமுகங்கள், சம்பிரதாயமான உரையாடல்கள்!

''சாயங்காலம் குழம்பிண்டிருந்தோமே... சாந்தினி ராஜகோபாலன் யாருன்னு தெரியலேன்னு... அந்த ராஜகோபாலன் இவரோட பிள்ளைதான். பாங்கிலே ஆபீஸரா இருக்கான். ராஜப்பான்னுதான் கூப்பிடுவோம். பத்திரிகையிலே இன்னார் பிள்ளைன்னு போடல்லே. அதுதான் புரியல்லே. இப்போ குவாலியர்லே இருக்கானாம்....''

அவள் நிறுத்தாமல் பேசிக் கொண்டே போனாள். என்னுள் ஒரு சின்னப் பூகம்பம் வெடிக்கிறது. எரிமலை குமுறுகிறது. 'மனிதர் மிகவும் சாதுவாய் இருக்கிறார். அவரைப் போலத்தானே பிள்ளையும் இருப்பான்' என்று மனம் கழிவிரக்கப்படுகிறது.

''எப்படியாவது இந்தக் கல்யாணத்தை நடக்காமல் பண்ணிப்பிடணும்!'' மனத்துள் ஜனித்த வார்த்தைகள் பிரசவமாகாமல் தடை செய்யப்படுகின்றன. அல்லது தாமே சிறைப்படுகின்றன.

சிலிர்த்துக் கொள்கிறேன்.

''உமாக் கண்ணு! இந்தப் பொண்ணு ரொம்ப மோசமானவள். இவளைப் போய் ஒன்னோட சித்தப்பா பிள்ளை கல்யாணம் பண்ணிக்கிறதா?'' என்று எப்படிச் சொல்ல முடியும்?

நல்ல வேளையாய் உமாவே பேச்சைத் தொடங்கினாள். ''இந்தக் கல்யாணமே ஒரு வேடிக்கையாய்த் தோணறது. ராஜப்பாவுக்கும் கெட்ட சகவாசம் நிறைய உண்டு. அந்த நாளிலேயே அவன் நடத்தை கெட்டவன். எப்போவோ மதுரை போயிருந்தப்போ இவளைச் சந்திச்சிருக்கான், என்ன





மாயம்னு தெரியல்லே. இவனைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன் அப்படின்னு முடிவு பண்ணிட்டான். அந்தப் பொண்ணும் ஒரு மாதிரின்னு தெரியறது. சித்தப்பாவுக்குத் தெரிஞ்சப்புறம் கல்யாணம் பண்ணிவைக்க எப்படி மனசு வரும்? எல்லாத்தையும் தூண்டித் துருவி ஆராய்ஞ்சு எத்தனையோ கல்யாணங்களைப் பண்ணி வச்ச சித்தப்பா இந்தப் பெண்ணோட விவரங்களைத் தெரிஞ்சுண்டபோது தான் தூளாப் பொடிஞ்சு போனார்.

''ஆனா, ராஜப்பா விடல்லே. ஆறு வருஷமா இவனும் இவளுக்காகவே காத்திண்டிருந்தானாம். 'நான் ஒண்ணும் யோக்கியமானவன் இல்லே'ன்னு சொல்லியே அப்பாவைச் சம்மதிக்க வச்சிருக்கான் ராஜப்பா. இது என்ன காதல்னு சொல்றது?''

பெரியவர் நிம்மதியாய் உறங்கிக்கொண்டிருந்தார். திருமணத்துக்குச் சென்று வருவது தவிர்க்க முடியாதது. மன உறுத்தல்களைச் சமாளிப்பதும் அவ்வளவு எளிதானதில்லை.

காலையில் பெரியவர் விடைபெற்றுச் சென்ற பிறகு ஒரு சின்னச் சபலம். விளைவு எப்படியானாலும் ஆகட்டுமென்று இந்தச் சமயத்திலாவது என்னைப் பற்றிய உண்மையை உடைத்து விடலாம். ஒன்பதாண்டு காலமாய் மனத்தை அழுத்திக் கொண்டிருக்கும் சுமையை இறக்கி விடலாம் என்று கோழைத்தனம் கொடி கட்டிப் பறக்கிறதே! தெளிவற்ற மன நிலையுடன் அலுவலகம் செல்கிறேன். திரும்புகிறேன்.

மூன்று நாட்கள் அமைதியைக் குலைத்துக் கொண்டு திணறிக் கழிந்த பிறகு நானும் அவளும் திருமணத்துக்குப் புறப்படுகிறோம்.

கல்யாண வீட்டில் எல்லா ஏற்பாடுகளும் வழக்கம் மாறாமல் இருந்தாலும் அதன் புனிதத் தன்மை எங்கோ பறிபோய்விட்ட மாதிரி ஒரு பொலிவிழந்த நிலை கண் முன் தெரிகிறது.

''மீட் மிஸ்டர் ராஜகோபாலன்'' என்று யாரோ எனக்கு அறிமுகம் செய்து வைக்கிறார்கள். செயற்கையான தோழமையுடன் கைகுலுக்குகிறேன்.

மணப் பெண்ணுக்கு மட்டுமே உரிய பூரண ஒப்பனைகளுடன் சாந்தி அமர்ந்திருக்கிறாள். ஊஞ்சலில் மெல்ல அமர்கிறாள். நாணிக் கண் புதைக்கிறாள். மலர் மாலைகளில் மணக்கிறாள்.

எண்ணத்தில் பழைமைகளை, கறைகளை அழித்துவிட முயன்று முயன்று நான் தோற்கிறேன்.

துல்லியமான மனமகிழ்ச்சியில் உமா பரபரக்கிறாள். அவளுக்குத் திருமண விழாவும் அதன் நிறைவும் மட்டுமேதான் சிந்தனை.

நாயக நாயகியரைப் பற்றி அவனுக்கு என்ன கவலை?

திருமணம் முடிந்து, சாந்தினி, ராஜகோபாலனுக்கு மட்டுமே உரியவள் என்று அடையாள வில்லை மாட்டப்பட்ட சில மணி நேரங்களில் தன் மனைவியை நண்பர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கிறான் அவன். சம்பிரதாயமாய் நானும் அவளை வாழ்த்தி நிற்கும்போது நிமிர்ந்தும் நிமிராத அவளுடைய பார்வையில் நான் பட்டுத் தெறிக்கிறேன். சாந்தினியின் கண்களின் மிரட்சி எனக்கு மட்டும் புரிகிறது.

**ம**றுநாள் காலையில் நாங்கள் ஊருக்குத் திரும்ப ஆயத்தமாகும்போது மணப்பெண் அழைப்பதாய் யாரோ வந்து சொல்கிறார்கள். நான் அவசரத்துடன் புறப்படும்போது, உமாவும் கூட வருகிறாள். அவளை வரவேண்டாம் என்று சொல்ல முயல்கிறேன். எதையோ நினைத்து அவளே நின்றுவிடுகிறாள்.

''உங்களை என்ன உறவு முறை வெச்சு அழைக்கிறதுன்னு இன்னும் நான் தெரிஞ்சுக்கல்லே. காலேஜ்லே படிக்கும்போது மோசமான சூழ்நிலையிலே நான் போனது உண்மை; ஆனா ராஜப்பாவைச் சந்திச்ச அப்புறம் எல்லாம் மாறிப்போயிடுத்து. பழமையை நினைவூட்டற மாதிரி இந்தக் கல்யாண மண்டபத்திலே ஒரே சாட்சியா நீங்க வந்திருக்கீங்க. மனம் சலனப்பட்டுப்போய் என்னையோ அவரையோ நீங்க வெறுக்கக் கூடாதுங்கறதுக்காகத்தான் இப்போ ஒங்களைக் கூப்பிட்டு அனுப்பிச்சேன். அழுக்கையெல்லாம் துடைச்சு எறியற மாதிரிப்பழைய நினைவுகளையெல்லாம் அழிச்சுட்டு நிர்மலமா இருப்போம். என்ன, நெருக்கமான உறவுங்கற வளையத்துக்குள்ளே இனிமேல் சுற்றி வந்தாகணும்... இல்லையா?''

கைகூப்பி அவளிடம் விடை பெறுகிறேன். புன்னகைத்தபடி ராஜகோபாலன் வருகிறான். கை குலுக்குகிறான். 'எல்லாம் நான் அறிவேன்' என்கிற தொனி அவன் பார்வையில் விழுகிறது. அவளை முழுவதுமாய்ப் புரிந்துகொண்ட கணவன் அவன்.

உமாவிடம் திரும்பும்போது அவள் கேட்கும் முன்பே ''சாந்தினியை எனக்குத் தெரியும்'' என்று கூறி ஒப்புதல் வாக்குமூலம் தருகிறேன்.

உமாவின் கண்களின் ஓரத்தில் சின்னதாய்ப் பனிமலர் அரும்புகிறது. என் பதிலை அவள் ஜீரணித்துக் கொண்டாள். பத்தாண்டு காலமாய் நம்பிக்கை விதைகளுக்கு உயிர் தருகிற ஒருத்தியிடம் மறைத்து வைத்த உண்மை தானே வெளிப்பட்டபோது—

உமா அதிர்ச்சியுறவில்லை.

'கற்பு நிலையென்று சொல்ல வந்தால்' என்ற பாரதியாரின் பாடல் வரி என் நெஞ்சைப் பிழிகிறது.

⌘ முருகேசபாண்டியன், கரம்பாடி

கே. கடுகு பதிலில் காரம் குறைந்து வருகிறதே?

ப: அப்படியா?

⌘ நடேஷ்கண்ணு, விளாத்திகுளம்

கே. கடுகு பதிலில் காரம் அதிகரித்து வருகிறதே?

ப: அப்படியா?

---

⌘ எஸ். லட்சுமி நரசிம்மன், மதுரை-2

கே. நம் நாடு ஜப்பானியரைப்போல் ஏன் முன்னேற முடியவில்லை?

ப: அணுகுண்டாலும் யுத்தத்தினாலும் பலத்த சேதமடைந்த ஜப்பான் விறுகொண்டு எழுந்து ஓர் அசுர வேகத்துடன் உறுதியுடன் முன்னேற்றத்துக்கான வழி வகைகளைத் துவங்கியது. அவர்களிடம் உள்ள தீவிரம் நம்மிடம் இல்லை. சில வருஷங்களுக்கு முன்பு ஒரு செய்தி படித்தேன். ஜப்பானில் வேலைநிறுத்தம் செய்த ஒரு கம்பெனித் தொழிலாளர்கள் ட்யூட்டியின் போது சின்ன கறுப்புப் பட்டையைச் சட்டையில் அணிந்து கொண்டார்களாம். ட்யூட்டி முடிந்த பிறகு கோஷம், கூட்டம் எல்லாம். வேலைநிறுத்தம் என்பது அதிருப்தியைக் காட்டுவதற்கு ஓர் அடையாளம். நம் ஊரில் அதிருப்தியைச் சதா காட்டிக் கொண்டே இருக்கிறோம். சின்னத் தகவல்: சோனி டிரான்சிஸ்டர் தயாரிப்பவர்கள் இப்போது விமானமும் தயாரிக்க ஆரம்பித்து விட்டார்களாம்! இதுதானே முன்னேற்றம்!

---

⌘ இரா. இராமன், ஆத்தூர் (நெல்லை)

கே. அரசியல்வாதிக்கும் மந்திரவாதிக்கும் உள்ள ஒற்றுமை என்ன?

ப: ஒரு மந்திரக்காளி! 'மந்திரத்தால் மாங்காய் வரவழைக்கிறேன்' என்று இரண்டு பேரும் சொன்னால், முன்னவர் ஆயுளுக்கும் சொல்லிக் கொண்டிருப்பார். பின்னவர், நம்மை ஏமாற்றியாவது ஒரு மாங்காயை வரவழைத்துக் காண்பிப்பார். ஏமாற்று வேலைதான் இருவருடைய பிழைப்புக்கும் அஸ்திவாரம்!

⌘ ப. கதிர்வேலன், குளித்தலை

கே. நானே நம்முடையது என்று எத்தனை நாளை எண்ணிக்கொண்டிருப்பது?

ப: என்றைய தினம் என்னும் சக்தி இழந்து போகிறேனோ, அன்றுவரை!

⌘ பி. வேணுகோபால், வேலூர்

கே. கடுகு மாமா கடுகு மாமா பரிசு பெறக் கேள்வி ஒன்றைச் சொல்லுங்களேன்.

ப: வேணு மருமானே, வேணு மருமானே! அதுமட்டும் சொல்ல மாட்டேனே!

⌘ B. இராமசாமி, சென்னை-18

கே: கங்கை அமரனின் பாடல்களைப் பாடல்களாக ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இறைமையைக் காட்டிலும் அந்தஸ்து உள்ளவர்களைத்தான் எல்லாருமே பயன்படுத்திக் கொள்கிறார்களே?

ப: உண்மை, உண்மை. நீங்களும் அந்தஸ்து ஏற்படுத்திக் கொள்ளுங்களேன். வேண்டாம் என்று யாராவது சொல்கிறார்களா?

⌘ ஆர். பி. திருஞானம், கொரட்டி

கே. ஒருவன் எப்போது தெரிந்ததைத் தெரியாதது போலவும் தெரியாததைத் தெரிந்தது போலவும் காட்டிக்கொள்ள வேண்டும்?

ப: முக்கியமாக இம்மாதிரி கேள்வி — பதில் பகுதி எழுதும்போது.

⌘ ஜி. மகாலட்சுமி, புதுடில்லி-23

கே. உங்கள் எழுத்தே உங்களுக்குச் சிபாரிசு செய்ய வேண்டும் என்று பதில் கூறியிருந்தீர்கள். ஆனால் என்னுடைய கதைகள் இன்றைய நாகரீகத்திற்கு ஒத்துவராமல் இருக்கிறதே!

ப: ஜெயமாலினிக்கு உள்ள அளவு கிராக்கி இல்லை என்றாலும் பத்மா சுப்பிரமணியத்துக்கு நிறைய நடன அமைப்புகள் இல்லாமல் போய்விடவில்லையே!

---

ரூ. 5 பரிசு பெறுபவர்:

**எஸ். லட்சுமி நரசிம்மன்**
**79/காம்/22, பி. காம்**
**முதல் வகுப்பு**
**அமெரிக்கன் கல்லூரி,**
**மதுரை-2**






# கடுகு பதில்கள்



# ரிஷி மூலம்

## பட விமரிசனம்

போலீஸ் அதிகாரி சந்தோஷ் இளம் வயதில் பள்ளிப் படிப்புக்காகப் பிக்பாக்கெட் அடித்தார் என்பதுதான் ரிஷி மூலம்.

மனைவி மனத்தில் சந்தேக வித்து ஊன்றப்பட அவள் விம்பினால், சந்தோஷ் போலீஸ் வேலையை ராஜினாமாச் செய்துவிட்டு, வேறு ஊருக்குச் சென்று தேயிலை எஸ்டேட் அதிகாரியாக ஆகி, தம் மகனையும் வளர்த்து டென்னிஸ் சாம்பியன் ஆக்குகிறார். பதினைந்து வருஷங்களுக்குப் பிறகு கலியுக வனவாசம் முடிந்த பிறகு பிரிந்த குடும்பம் இணைகிறது.

போலீஸ் அதிகாரி சந்தோஷாக நடிகர் திலகம் சிவாஜி கணேசன் கண்ணியமாக நடிப்பதோடு, தம் இளமைக் காலத் தவற்றை நினைத்துச் சஞ்சலப்படுவதைச் சிறப்பாகச் சித்திரித்திருக்கிறார்: பண்பின் சிகரமாக உயர்கிறார் தேயிலை எஸ்டேட் அதிகாரியாக இருக்கும்பொழுது!

ஓர் இளம் பெண் (ரீனா) டபி காரணமாகத் திருடி அடிபட்டபோது, அவளுக்கு உணவு அளித்து வேலைக்கு வைத்துக் கொள்கிறார். சேலை கட்டத் தெரியாத அந்தப் பாவைக்குச் சேலை கட்டச் சொல்லித் தருகிறார். துகில் உரியும் காட்சிகளையே தமிழ்ப் படங்களில் பார்த்து அலுத்த நமக்கு மாறுபட்ட காட்சி! அந்த இளம் பெண்ணுக்கு நல்ல கட்டிளங் காளையை மணம் முடித்தும் வைக்கிறார்.

புன்னகை அரசி கே. ஆர். விஜயா நடிகர் திலகத்தோடு காதலில் பிணங்குவதும் இணங்குவதும். குழந்தைக்கு முன்னால் சங்கடப்படுத்துவதும், அவர் நடிப்புத் திறனுக்கு ஏற்ற மணிக்கின்றன.

சிரஞ்சீவி ஹாஸ்யங்கள் மனோரமா—சுருளிராஜன்—மகேந்திரன் காமெடி காட்சிகளில் மறுபடியும் இடம் பெறுகின்றன.

டைரக்டர் எஸ். பி. முத்துராமன் டைரக்ஷன் திறமைக்கு ஒரு சோறு பதம்: சிவாஜி மனம் பழசை எண்ணி அலைபாயும்போது ஒரு பறவை சிறகடிப்பதைக் காட்டுவது நன்றாயிருக்கிறது. படத்தில் காமிராமேன் பாபுவின் கைவண்ணமும் மிளிர்கிறது.

'ரிஷிமூலம்' நாடக மேடையில் பவனி வந்துவிட்டு வெள்ளித் திரைக்காக மெருகேற்றப்பட்டிருக்கிறது. திரைக் கதை, வசனம் எழுதிய மகேந்திரன் அழகு தமிழில் சிந்திக்க வைக்கிறார்.

சந்தோஷின் மகனாக வரும் துடிப்புள்ள இளம் நடிகர் சக்கரவர்த்தி 'நடிகர் திலக'த்தின் அரவணைப்பில் முன்னுக்கு வரத் துடிக்கிறார்!

கண்ணதாசனின் 'நெஞ்சில் உள்ள காயம் ஒன்று நெஞ்சை விட்டுத் தீர்ந்தது' என்ற இனிய பாடல் ஜெயசந்திரனின் குரலில் நெஞ்சில் நிலைக்கிறது.

பலவீனமான கதை ஆராய்ச்சியில் இறங்குவதை விட நடிகர் திலகம், புன்னகை அரசி நடிப்பின் சிறப்பில் ஆழ்ந்து மகிழலாம்!

நதி மூலம் ரிஷி மூலம்
பார்க்கக் கூடாது
என்று சும்மாவா
சொன்னார்கள்!

—பி.எஸ்.எம்.





அனைவருக்கும்
மனநிறைவு தரும்
சுவைமிகு ஊறுகாய்!

**டி.எஸ்.ஆர்**

# வெஜிடபிள் ஊறுகாய்

டி. எஸ். ஆர். & கோ.,
'கோகுல் கார்டன்ஸ்'
கும்பகோணம்.




Criterion TSR 3375 TM



# வீராதிவீரன்

என்னைவிடப் பெரியவன் யாருமில்லை என்று மார்தட்டிச் சொல்லத் தயங்காத முகமது அலி ஒரு வயதுக் குழந்தையாக இருந்தபோதே ஒரு நாள் கோபத்தில் தாயாரின் இரு பற்கள் தெறித்து விழுமாறு அவர் முகத்தில் குத்தியவர்! புது தில்லியில் உலக குத்துச்சண்டை சாம்பியனிடம் கேட்கப்பட்ட கேள்விகளும் அவரது பதில்களும்:

கே. நீங்கள் இஸ்லாமைத் தழுவியவர். ஒரே சமயத்தில் நான்கு மனைவியருடன் வாழ்வது நல்லதா? அல்லது ஒருவர் பின் ஒருவராக விவாகரத்து செய்துவிட்டு அடுத்த மனைவியை அடைவது நல்லதா?

ப: ஒரே சமயத்தில் நான்கு நரகம்; மூன்றும் இட்டத்தட்ட நரகமே; இரண்டு எனில் தொந்தரவு அதிகம்; ஒன்று எனில் மகிழ்ச்சி நிலவும்; நீண்ட ஆயுளோடு வாழலாம்.

(அலிக்கு இதுவரை மூன்று முறை திருமணம் நடந்திருக்கிறது. ஆறு குழந்தைகள். இன்றைய அவருடைய மனைவி வெரோனிகா, இஸ்லாமைத் தழுவிய பிறகு ரெஹானா ஆனார். புடைவை அணிந்து, திலகம் இட்டுக் கொண்டு காட்சி தருகிறார்!)

கே. நானே பெரியவன் என்று கூறுகிறீர்களே, அப்படி மாமனிதனாவதற்கு என்ன வழி?

ப: (சமையல் குறிப்பு போன்று கூறுகிறார்): சில கிண்ணங்கள் வாழ்க்கை, ஒரு ஸ்பூன் பொறுமை, ஒரு கரண்டி தாராள மனப்பான்மை, ஒரு டம்ளர் அன்பு, ஒரு டபரா சிரிப்பு எல்லாவற்றையும் ஒன்றாகக் கொட்டி நன்றாகக் கலந்து கிளற வேண்டும். வாழ்நாள் என்னும் தட்டில் பரப்பி, துண்டம் போட்டு நீங்கள் சந்திப்போருக்கெல்லாம் ஒவ்வொரு துண்டம் வழங்கிவர வேண்டும்!

கே. நீங்கள் குஸ்தி போட ஆரம்பித்தது எப்படி?

ப: எனக்குப் பன்னிரண்டு வயதானபோது என் சைக்கிளை எவனோ திருடிவிட்டான். 'திருடனை எங்கேயாவது கண்டீர்களா?' என்று எனக்குத் தெரிந்தவரையெல்லாம் கேட்டேன். அவன் அகப்பட்டால் அவனைக் குத்திக் குதறி எடுக்க விரும்புவதாக எல்லோரிடமும் சொன்னேன். அந்தத் திருடனைக் கண்டுபிடிக்க முடியவில்லை. என் சைக்கிளையும் திரும்பப் பெற இயலவில்லை. அதனால் அவனைக் குத்திக் குதற வேண்டும் என்ற என் வேகமும் தணியவேயில்லை. குஸ்தி வீரனாகி விட்டேன்.

கே. உங்களை எதிர்த்தவர்களுள் தலை சிறந்தவன்?

ப: ஜோ ஃபிரேஸியர். அவன் சூரன் மட்டுமல்ல; விகாரமானவன்.

கே. ருஷ்யர்கள் ஆப்கானிஸ்தானத்தை ஆக்கிரமித்திருக்கிறார்களே?

ப: உலகிலுள்ள கறுப்பர்கள் எல்லாரும் ருஷ்ய ஒலிம்பிக்கைப் பகிஷ்கரிக்க வேண்டும்.

(அலி வளர்ந்தது, லூயிஸ்வில் என்ற ஊரில். பெருமை பீற்றிக் கொள்வதில் அவருக்கு நிகர் யாருமில்லை என்பதால், யாராவது பெருமை அடித்துக்கொண்டால் அவனை ''லூயிஸ்வில் வாயன்'' என்று வர்ணிப்பது அமெரிக்காவில் சகஜம்!

அலிக்கு உள்ள சொத்தின் மதிப்பு என்ன? ''அவனுக்கே தெரியாது'' என்கிறார் அலியின் தகப்பனார். அவ்வளவு இருக்கிறதாம்!)

---

ஆசிரியர் ஒருவர் மாணவர்களுக்கு, முன்பு சொன்ன ஜோக்கையே திரும்பவும் சொன்னார். உடனே ஒரு மாணவன் எழுந்து,'' சார்? இதை 6 மாதம் முன்பே சொல்லி விட்டீர்கள்?'' என்று கூற, ஆசிரியர் சமயோசிதமாகச் சமாளித்தார்: ''முன்பு சிரிக்காதவர்களெல்லாம் இப்போது சிரிக்கலாம்!''

-சம்பத் குமாரி



கே. உங்களை விடப் பெரிய வீரர் உண்டா?

ப: அல்லா இருக்கிறார்!

கே. ஸ்ரீமதி காந்தி?

ப: எனக்கு அடுத்தாற்போல் ஒரு மாமனிதர் உண்டெனில் அது அவர்தான்! அவர் தாமே ஓய்வு பெற எண்ணும்வரை தலைவராக இருப்பார்!

கே. 'நானே பெரியவன், நானே பெரியவன்' என்று மார் தட்டிக் கொண்டு பிரசாரம் பண்ணுவதன் அர்த்தம் என்ன?

ப: அதுதான் விளம்பர தந்திரம். ஒவ்வொரு தடவை குஸ்தி சண்டைக்கு முன்னும் நான் இப்படிக் கூற, மக்கள், 'இந்தப் பயல் ரொம்பத்தான் பெருமை பீற்றிக் கொள்கிறான்; இவன் தோல்வி அடைந்து வீழ்வதைப் பார்க்க வேண்டும்' என்று ஆசைப்பட்டு வந்து கூடுகிறார்கள். நிறைய டிக்கட்டுகள் விற்பனையாகின்றன!

கே. நீங்கள் அல்லாவைப் போற்றுகிறீர்கள். ஒருவனை இப்படி கூழாகுமாறு குத்திக் குதறுவது பற்றி என்ன எண்ணுகிறீர்கள்?

ப: கடவுள் ஒரு மனிதனின் நோக்கத்தைத் தான் காண்கிறார். செயலை அல்ல. என் வீட்டில் நான் இல்லாதபோது ஒருவன் புகுந்து என் மனைவியைப் பலவந்தப் படுத்துகிறான், அப்போது நான் திரும்பி வந்துவிடுகிறேன், ஒரு துப்பாக்கி எடுத்து அவனைச் சுட்டுவிடுகிறேன் என்றால் கடவுள் என்னை வேறு விதமாகத்தான் எடை போடுவார்.

நான் வியட்நாம் யுத்தத்துக்குப் போக மறுத்தேன். எனக்குத் தீங்கு செய்யாத யாரையும் நான் கொல்ல விரும்பவில்லை. ஆனால் குத்துச் சண்டை அரங்கில் நான் குத்துவது என்பது வேறு. யாரையும் காயப்படுத்துவதல்ல நோக்கம்; என்னை நானே வீரன் என்று நிரூபித்துக்கொள்வதுதான்! ஒரு சமயம் என் எதிரி ரொம்பக் காயப்பட்டுவிட்டபோது நானே நடுவரை அழைத்துச் சண்டையை அவர் நிறுத்திவிட வேண்டும் என்று கேட்டுக் கொண்டேன்.

கே. இந்த இந்திய விஜயத்தின் நோக்கம்?

ப: இந்தியாவில் பலகோடி ரசிகர்கள் எனக்கு இருக்கிறார்கள்; அவர்கள் எல்லோரும் என்னைப் பார்க்க வர முடியுமா? அதனால் நான் இந்தியா வருகிறேன். இது இன்னும் சிக்கனமான வழி அல்லவா?

நன்றி: ஹிந்துஸ்தான் டைம்ஸ்

# பொறியைத் தட்டியதுமே...



## திவ்யமான ஒளி பரவுகிறது

## அழகு ஒளிர்ந்து சிரிக்கின்றது

உங்கள் பூஜை அறைக்கு.
உன்னதமானதொரு விளக்கு!

வீட்டினுள்ளே காம்ப்டாலக்ஸ்
ஒளிரட்டும்...ஓ ...அழகைத்
தனித்தொளிரச் செய்யும்
அதன் பாங்கே சிறப்புத் தான்!

PE-I-4087



காம்ப்டாலக்ஸ், எடுத்துப்பொருத்திடக் கூடிய, எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட். ஷேடுகளோ, விசேஷ இணைப்புகளோ தேவையில்லை. பொறியைத் தட்டுங்கள். வேண்டிய வெளிச்சம் உடனே பரவட்டும்.




1879-1979
100 YEARS
ELECTRIC
LIGHT

# காம்ப்டாலக்ஸ்

எடுத்துப் பொருத்திடலாம், எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட்

## பிலிப்ஸ்

# காப்டன் பதவி ஏற்றபோது

**வி**ருத்தாசலம் என்று அழைக்கப்படும் திருமுதுகுன்றத்தில் உள்ள கொளஞ்சியப்பர் அரசினர் கலைக் கல்லூரி. மாணவர், மாணவியர் சேர்ந்து படிக்கும் கல்லூரி. கல்கியின் 'க்விஸ்' நிகழ்ச்சியில் பங்கேற்கப் பல மாணவ, மாணவியர் முன்வந்த நிலையில் சீட்டுக் குலுக்கல் படி ஆறு பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஐந்து மாணவர்களும் ஒரு மாணவியும் பங்கேற்றனர். கண் பார்வையற்ற கோபால் எனும் மாணவர் நிகழ்ச்சியில் பங்கேற்று ஆர்வத்துடன் விடையளித்தது குறிப்பிடத்தக்க அம்சம். பேராசிரியர் ஏ. வைத்தியநாதசாமி க்விஸ் மாஸ்டராக இருந்து நிகழ்ச்சியை நடத்திக் கொடுக்க முன்வந்தார். கல்லூரி முதல்வர் பேராசிரியர் வி. ராமகிருஷ்ணன் அளித்த ஒத்துழைப்பும், உற்சாகமும் நிகழ்ச்சியின் ஜீவநாடியாக இருந்தது. சரித்திர உதவிப் பேராசிரியர் வி. பாலகிருஷ்ணனின் உதவியும் மறக்க முடியாததாகும்.

போட்டியில் பங்கேற்றவர்கள்:

1. B. செந்தில் குமார்
2. எம். ஜாஃபர்
3. ஆர். ராஜன்
4. என். சரோஜா தேவி
5. கே. கோபாலன்
6. டி. வி. ரமேஷ்

**கேள்விகள்**

1. சுதந்திர இந்தியாவில் உதவிப் பிரதமர் பதவியை முதன் முதலில் வகித்தது யார்?

   (லார்ட் மௌண்ட்பேட்டன், ராஜேந்திர பிரசாத், லால் பகதூர் சாஸ்திரி என்றெல்லாம் விடைகள் வந்தன. சரியான விடையை கோபால் கூறினார்.)

2. உலகப் பிரசித்தி பெற்ற ஓர் ஆங்கில எழுத்தாளரை சகோதரராகக்கொண்ட பிரபலமான ஓர் இந்திய கார்ட்டூன் சித்திரக்காரர் யார்?

   (செந்தில் குமார் சரியான விடையைக் கூறினார்.)

3. மம்மி (Mummy) எனும் ஆங்கில வார்த்தையை பொதுவாகத் தாயை அழைப்பதற்காக உபயோகிக்கிறோம். மம்மி என்பதற்கு இன்னொரு அர்த்தம் என்ன என்று கூற இயலுமா?

   (மனிதத் தலையுடன் கூடிய சிங்கம் என்று ஒரு மாணவர் கூற சரியான விடையைச் சொன்னவர் ராஜன்)

4. விண்வெளியில் இந்தியா பறக்க விட்ட இரண்டாவது செயற்கைக் கோளின் பெயர் என்ன?

   (சரியான விடையை ரமேஷ் கூறினார்.)

போட்டி நிர்வாகிகளும் பங்கேற்றவர்களும்





# பட்டோடியின் வயது என்ன?

## கல்லூரியில் 'க்விஸ்'

5. 'முத்தநாதன்' எனும் பாத்திரம் எந்தப் புராணத்தில் வருகிறது?
(கோபால் சரியான விடையைக் கூறினார்.)

6. Seismograph எனும் கருவியின் உபயோகம் என்ன?
(பார்வையாளர்களில் ஒரு மாணவர் சரியான விடையைக் கூறினார்.)

7. N. C. E. R. T. என்பதன் விரிவு என்ன?
(செந்தில் குமார் இக்கேள்விக்குச் சரியான விடையைக் கூறினார்.)

8. Pro rata என்பதன் அர்த்தம் என்ன?
(எவரும் விடையளிக்கவில்லை.)

9. ஸ்ரீலங்கா பாராளுமன்றத்தின் எதிர்க் கட்சித் தலைவர் யார்?
(ஜாஃபர் சரியான விடையைக் கூறினார்)

10. Canesugar க்கும் beet sugar க்கும் உள்ள ரசாயன வித்தியாசம் என்ன?
(சரியான விடையை எவரும் கூறவில்லை)

11. ரோமானிய எண் குறியீட்டுப்படி L எந்த எண்ணைக் குறிக்கிறது?
(சரியான விடையை ராஜன் கூறினார்.)

12. முதன் முதல் இந்தியக் கிரிக்கெட் அணியின் காப்டன் பதவியை ஏற்ற போது மன்ஸூர் அலிகான் பட்டோடியின் வயது என்ன?



'பயிரா'



மயில்

(சரியான விடையை எவரும் கூறவில்லை)

13. தாய்லாந்தின் தலைநகரம் எது?
(ஜாஃபர் சரியான விடையைக் கூறினார்)

14. 'ஆரிய மாயை' என்ற நூலின் ஆசிரியர் யார்?
(சரியான விடையை ரமேஷ் கூறினார்.)

15. பாட்னாவின் புராதனப் பெயர் என்ன?
(சரியான விடையை ரமேஷ் கூறினார்.)

16. 'ரங்கசாமி கோப்பை' எந்த விளையாட்டில், எந்தப் போட்டியில் வெற்றி பெறுவதற்காக வழங்கப்படுகிறது?
(சரியான விடையைக் கூறியவர் கோபால்)

ஜாஃபர் பரிசு பெறுகிறார்

17. இத்தாலிய நாட்டின் நாணயம் எது?
(எவரும் விடையளிக்கவில்லை)

18. ஐக்கிய நாட்டு சபையின் கொடியில் உள்ள நிறங்கள் எவை?
(பார்வையாளரில் ஒரு மாணவர் சரியான விடையைக் கூறினர்.)

19. 'குறிஞ்சி மலர்' எனும் தலைப்பில் ஒரு தமிழ் நாவலை கல்கியில் தொடர் கதையாக எழுதிய எழுத்தாளர் யார்?
(எஸ். ஏ. பி., அகிலன் என்றெல்லாம் விடைகள் வந்தன. சரியான விடையை ராஜன் கூறினர்.)

20. கி.பி. 1885ம் ஆண்டு நிகழ்ந்த ஒரு முக்கிய நிகழ்ச்சி எதுவென்று கூற இயலுமா?
(சரியான விடையைக் கூறியவர் ராஜன்)

21. 'இல்லஸ்ட்ரேட் வீக்லி'யின் தற்போதைய ஆசிரியர் யார்?
(செந்தில் குமார் சரியான விடையைக் கூறினர்.)

22. தாதா சாகேப் பால்கே விருது எந்தத் துறையில் சாதனைக்காக அளிக்கப்படுகிறது?
(இக்கேள்விக்கு சரோஜா தேவி விடையளித்தார்.)

23. Moratorium என்பது எதைக் குறிக்கும்?
(பார்வையாளரில் ஒருவர் சரியான விடையைக் கூறினர்.)

24. இந்தியாவின் தேசியப் பறவை எது?
(சரோஜா தேவி இக்கேள்விக்கான சரியான விடையான 'மயில்' என்று கூறவும் மாணவர் பகுதியிலிருந்து 'மயிலு, மயிலு' என்று ஏகப்பட்ட குரல்கள்.)

25. முக்கியமான துறைமுகங்களை அதிகமாகக் கொண்ட இந்திய மாநிலம் எது?
(ராஜன் சரியான விடையைக் கூறினர்)

26. சிவாஜி கணேசன் நடித்து வெளியான நூறாவது படம் எது?
(பங்கேற்றவர்கள் பதிலளிக்கு முன்னரே பார்வையாளர்களிடமிருந்து விடை வந்ததால் எவருக்கும் மதிப்பெண் அளிக்கப்படவில்லை.)




27. அதிக ஜனத்தொகை கொண்ட மாநிலம் எது?
(ஜாஃபர் சரியான விடையைக் கூறினர்)

28. கிரிக்கெட் மட்டையின் குறுக்கு அகலம் எவ்வளவாக இருக்க வேண்டும்?
(எவரும் விடையளிக்கவில்லை.)

29. ஓட்டுச் சீட்டு துப்பாக்கிக் குண்டைவிட வலிமையானது (the ballot is stronger than the bullet.) என்று கூறிய அமெரிக்கத் தலைவர் யார்?
(சரியான விடையைக் கூறியவர் ராஜன்)

30. Forbidden city என்று கூறப்படும் நகரம் எது?
(எவரும் சரியான விடையைக்கூறவில்லை)

[பங்குபெற்ற மாணவரிடையே போட்டி கடுமையாகத்தான் இருந்தது. ராஜன் அதிகக் கேள்விகளுக்கு விடையளித்தார். ஆனாலும், முதல் சலுகைக் கேள்விகளுக்கு அதிகமாக ஜாஃபர் பதில் அளித்ததால் அவருக்கு அதிக மதிப்பெண்கள் கிடைக்க 'கல்கி'யின் ரூ. 50 பரிசு அவருக்கு அளிக்கப்பட்டது. பங்கு பெற்ற மாணவர்களும், பார்வையாளர்களான மாணவர்களும் காட்டிய உற்சாகம் என்றும் மறக்க முடியாததாகும்.]

விடைகள்

(1) சர்தார் வல்லபாய் படேல் (2) ஆர். கே. லக்ஷ்மண் (3) mummy is the body of a human being or animal embalmed for burial or dried up body preserved from decay (4) பாஸ்கரா (5) பெரிய புராணம் — மெய்ப்பொருள் நாயனர் கதையில் (6) நில நடுக்கத்தை அளக்க உதவும் கருவி. (7) National Council of Educational Research and Training. (8) In proportion. (9) ஏ. அமிர்தலிங்கம் (10) எவ்வித ரசாயன வித்தியாசமும் இடையாது. (11) L=50. (12) 20 (13) பாங்காக் (14) சி. என். அண்ணாதுரை (15) பாடலிபுத்திரம் (16) தேசிய ஹாக்கி விளையாட்டுப் போட்டியில் வெற்றி பெறும் அணிக்கு அளிக்கப்படுகிறது. (17) லிரா (18) வெள்ளை, நீலம் (19) மணிவண்ணன், எனும் புனை பெயரில் நா. பார்த்தசாரதி எழுதினர். (20) இந்திய தேசியக் காங்கிரஸ் ஸ்தாபிதம் ஆயிற்று. (21) எம். வி. காமத் (22) சினிமாத் துறையில் (23) கடன் வாங்கியவர் மீது கடன் கொடுத்தவர் எவ்வித நடவடிக்கையும் எடுக்காமல் தடுக்கும் அரசு ஆணை. (24) மயில் (25) தமிழ் நாடு. சென்னை, தூத்துக்குடி ஆகிய இடங்களில் இரு பெரிய துறைமுகங்களைக் கொண்டிருக்கிறது. (26) நவராத்திரி (27) உத்திரப் பிரதேசம் (28) நாலரை அங்குலம் (29) ஆப்ரஹாம் லிங்கன் (30) திபேத்திய நகரம் லஹாஸா அயல் நாட்டினர் நுழையக் கூடாது என்ற கட்டுப்பாடு முன்பு இருந்தது.

தொகுப்பு: நாயகன்
புகைப்படம்: லயன் ஸ்டுடியோ, விருத்தாசலம்

# ஜின்னா ராஜாஜிக்கு எழுதியது என்ன?

## 48. சட்டசபைத் தேர்தல்

அவசரமாகத் தென்னகம் திரும்பிய ஸி. ஆர். தேர்தல் பிரசாரத்தைத் தொடர்ந்தார். உடலாலும் உள்ளத்தாலும் இதில் முழுமையாக ஈடுபட்டிருந்த அவர் பம்பாய் மகாநாட்டுக்காகச் சில தினங்களை ஒதுக்க நேர்ந்து விட்டதற்காக வருந்தினார். காங்கிரஸின் தேசிய தேர்தல் அறிக்கையை உருவாக்குவதில் அவருக்கும் பங்கு இருந்தது. வேட்பாளர்களின் தனித் தனி தேர்தல் அறிக்கைகள் சிலவற்றையும் அவர் தயாரித்து அளித்திருந்தார். தேர்தல் செலவுகளுக்கு நிதி திரட்டிக் கொண்டிருந்தார். பிரசாரங்களுக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார். நமுனுக்களைப் பூர்த்தி செய்ய வேட்பாளர்களுக்குக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார். காங்கிரஸ் எதிர்ப்பாளர்களை அவர் தாக்கிக் கொண்டிருந்தார். அவர்களுடைய தாக்குதல்களுக்குப் பதில் அளித்துக்கொண்டு மிருந்தார்.

மாகாணத்துக்கு மத்திய சட்டசபையில் 16 இடங்கள் உண்டு. ஆனால் இவற்றில், பதினொன்றில்தான் காங்கிரஸ் போட்டியிட முடிந்தது. முஸ்லிம்களுக்கு மூன்றும், தாழ்த்தப்பட்டோர், நில உடைமையாளர் ஆகியோருக்குத் தலா ஒன்றும் ஒதுக்கப்பட்டிருந்தன. காங்கிரஸ் இந்த ஸ்தானங்களில் போட்டியிட விரும்பவில்லையோ அல்லது அந்தந்தச் சாராரின் அமைப்புக்கள் அங்கு நிறுத்தியிருந்த வேட்பாளரை எதிர்த்துப் போட்டியிட அதனால் முடியவில்லையோ, எவ்வாறாயினும் இத்தொகுதிகளில் காங்கிரஸ் வேட்பாளர்களை நிறுத்தவில்லை. ஜஸ்டிஸ் கட்சியிலிருந்து காங்கிரஸுக்குச் செல்வாக்கு மிக்க எதிர்ப்பு இருந்தது. அக்கட்சி மாகாணத்தில் ஆட்சி அதிகாரத்தில் இருந்ததுடன் பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் ஆதரவையும் அது பெற்றிருந்தது. காங்கிரஸானது பிராமணர் நலனுக்கு வாதாடும் கட்சி என்று ஜஸ்டிஸ் கட்சியினர் தாக்கினார்கள்.

இதே நேரத்தில் ஆசாரக்காரர்களும் காங்கிரஸை வன்மையாகத் தாக்கிக்கொண்டிருந்தனர். இவர்கள், ஆலயப் பிரவேச மசோதாவுக்கு ஆதரவு அளித்துக் கொண்டிருந்த ஸி. ஆர். மீது கோபமடைந்திருந்தனர். ஆசாரக்காரர்களின் ஒரு குழு வெளியிட்ட துண்டுப் பிரசுரம் பின்வருமாறு கூறியது:

''ராஜகோபாலாச்சாரியின் இனிய பேச்சில் மயங்கி விடாதீர்கள். பிரும்மா, விஷ்ணு, சிவன் ஆகியோர் பெயரால் நாங்கள் உங்களைக் கேட்டுக் கொள்கிறோம்! நமது மதத்தில் குறுக்கிட விரும்புகிறவர்களுக்கு, அவர்கள் மறக்க முடியாதபடி பாடம் கற்பியுங்கள். உங்கள் வோட்டு கடவுளுக்கா? அல்லது ராஜகோபாலாச்சாரிக்கும் அவரது காங்கிரஸ் வேட்பாளர்களுக்குமா?''

கடவுள் இதைப் பற்றி என்ன நினைத்தாரோ என்னமோ, பொதுமக்கள் ஸி. ஆருக்கும் அவரது காங்கிரஸ் வேட்பாளர்களுக்குமே வோட்டளித்தார்கள். அவர்கள் பதினொரு பொதுத் தொகுதிகளிலும் வென்றனர். சாதாரண சாதனையல்ல இது. ''உங்களுடைய அற்புதமான சாதனை குறித்து நீங்கள் நியாயமான பெருமைப்படலாம்'' என்று பட்டேல் ஸி. ஆருக்குத் தந்தி அனுப்பினார். காங்கிரஸ் ஆதரவுடன் வெற்றி பெற்றிருந்த ஒரு முஸ்லிம் தொகுதி வேட்பாளரான சையத் முர்டுஸா சாஹேப் எழுதினார்:

''பஞ்சாபுக்குப் போக உங்களுக்கு நேரமிருந்திருந்தால் அங்கே மத மாச்சர்யங்கள் அதிகம் என்ற போதிலும் அங்கேயும் இதே போன்ற முடிவுதான் ஏற்பட்டிருக்கும் என்று எனக்கு நிச்சயமாகத் தோன்றுகிறது.''

மகாத்மா காங்கிரஸிலிருந்து விலகுவதால் தேர்தலில் காங்கிரஸின் வெற்றி வாய்ப்புகள் பாதிக்கப்படும் என்று ஸி. ஆர். அஞ்சியது பொய்த்துப் போயிற்று. வெற்றியைக் கொண்டாடிய காந்தி, தேர்தலில் காங்கிரஸ் நிகழ்த்திய அற்புதங்களுக்கு மிகக் குறைந்த அளவே செலவாகியிருக்கிறது என்பதைக் குறிப்பிட்டுச் சொன்னார்.

ஸி. ஆர். வெற்றிக் களிப்பிலேயே மூழ்கி விடாமல் பரபரவென்று காரியங்களில் இறங்கினார். தேர்தல் பிரசாரத்தின்போது உதவிய அனைவரின் பெயர்களையும் விலாசங்களையும் தமக்கு அனுப்பி வைக்குமாறு வெற்றி பெற்ற வேட்பாளருக்கு எழுதினார்.

தமது கட்சிக்காரர்களுக்கு வெற்றியை எப்படி ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று அறிவுரை வழங்கினார். ''கட்டுப்பாடுகளைக் கடைப்பிடிக்க வேண்டிய தருணம் இது'' என்று அவர் சென்னைத் தொகுதியில் வென்ற சத்தியமூர்த்திக்கு எழுதினார். ''நமது வெற்றி, எதிராளிக்கு அவமானம் ஆகாது. இதனை நீங்கள் தனிப்பட்ட பேச்சு வார்த்தைகளிலும் சரி, பொதுக்கூட்டங்களில் சொற்பொழிவுகளின்போதும் சரி, வலியுறுத்த வேண்டும்.''

146 அங்கத்தினர்களை உடைய சட்டசபையில் இப்போது மானிலியா கோஷ்டி



ராஜாஜி வாழ்க்கை வரலாறு
ராஜ்மோகன் காந்தி

யைச் சேர்ந்த ஒரு டஜன் தேசியவாதிகள் உள்பட காங்கிரஸுக்கு 61 ஸ்தானங்கள் இருந்தன. ஸி. ஆர். ENO என்று வர்ணித்த கோஷ்டிக்கு 47 ஸ்தானங்கள் இருந்தன. இந்தக் கோஷ்டி ஐரோப்பியர்கள் (E) நியமன அங்கத்தினர்கள் (N) அதிகாரிகள் (O) ஆகியோரை உள்ளடக்கியது. இவர்களை 16 ராஜ விசுவாசிகள் ஆதரித்தனர். இவர்கள் நில உடைமையாளர்களுக்கும் மற்ற சலுகை தரப்பினருக்கும் பிரதிநிதிகள்.

ஆக, அரசு ஆதரவுப் பிரிவினரும் காங்கிரஸ்காரர்களும் ஏறத்தாழ சம ஸ்தானங்களைப் பெற்றிருந்தனர். நிகர விளைவு என்னவெனில் சட்ட சபையில் விவாதத்துக்கு வரும் எந்த ஒரு விஷயம் பற்றிய வாக்கெடுப்பின் முடிவையும் எம். ஏ. ஜின்னாவின் தலைமையில் இயங்கிய 16 முஸ்லிம் அங்கத்தினர்களே நிர்ணயிப்பார்கள் என்ற சூழ்நிலை பொதுவாக நிலவியது.

காங்கிரசும் சரி, அரசும் சரி, ஜின்னா கோஷ்டியின் ஆதரவை நம்ப முடியாத நிலையில் இருந்தன. ஸி. ஆர். டில்லியில் பல வாரங்கள் தங்கி ஜின்னாவின் ஆதரவுடன் ஒரு ஐக்கிய முன்னணி அமைக்கும் முயற்சியில் ராஜேந்திர பிரசாதுடன் சேர்ந்து ஈடுபட்டார். இதே நேரத்தில் தேசியவாதிகள் வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் வகுப்புவாரி பிரதிநிதித்வ முறையைக் கண்டனம் செய்து கொண்டே இருந்தார்கள். இதனால் ஸி. ஆர். - பிரசாத்தின் முயற்சி ஓரளவு கடினமாயிற்று. 'பிரசாத்தும் தாமும் மேற்கொண்டுள்ள முயற்சிகளுக்கு மாளவியா போடும் முட்டுக்கட்டைகளை முதல்தரமான சோகக் கதை என்று சரித்திரம் வர்ணிக்கும்' எனத் தாம் அஞ்சுவதாக ஸி. ஆர். குறிப்பிட்டார்.

பிரசாத் — ஸி. ஆரின் முயற்சிகளுக்கு அரசாங்கம் ஆதரவு தராதது இயல்பே. சட்ட சபை காங்கிரஸ் கட்சியின் தலைவர் புலாபாய் தேசாய்க்கு ஸி. ஆர். எழுதினார்: ''காங்கிரஸ், முஸ்லிம்களைக் கருவிகளாக உபயோகித்து வருகிறது என்ற ஒரு மனப்பான்மையை முஸ்லிம்களிடையே உருவாக்க அரசு ஆசாமிகள் சுறுசுறுப்பாக முயன்று கொண்டிருப்பார்கள் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. எனினும் இன்றுவரை ஜின்னா உங்களுடன் சேர்ந்தே வோட்டளித்து வருகிறார் என்பதில் மகிழ்கிறேன்.''

ஆயினும் தொடர்ந்து ஒத்துழைப்பு தர ஜின்னாவின் நிபந்தனைகள் ஐயத்திற்கு இடமின்றி இருந்தன. ஸி. ஆருடைய நோக்கில் அவை நடவாத காரியமாகவும் விளங்கின. ஸி. ஆருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் ஜின்னா குறிப்பிட்டார்:

''வகுப்புவாரி பிரதிநிதித்துவத்தை'' அதில் சம்பந்தப்பட்டுள்ள வகுப்பினர் மாற்றுத் திட்டம் ஒன்றை ஒப்புக்கொள்ளும் நாள்வரை காங்கிரஸ் ஏற்றுக் கொள்வதாக வெளிப்படையாக அறிக்கை விட வேண்டும். இந்த அடிப்படையில் ஒரு பலமான ஐக்கிய முன்னணியை நாம் உருவாக்க முடியும் என நினைக்கிறேன்.''

ஜின்னாவின் நிபந்தனையை காங்கிரஸ் ஏற்க முடியவில்லை. வகுப்புவாரி பிரதிநிதித்துவ முறையை அது நிராகரிக்காமல் இருந்ததே பெரிய காரியம். இதற்கே மாளவியா கோஷ்டியினரின் பலத்த ஆட்சேபனை இருந்தது. நிகர விளைவு என்னவென்றால் பல சமயங்களில் ஜின்னா கோஷ்டி வோட்டுப் போடாமலே இருந்து நடுநிலை வகித்தது; அல்லது அரசுக்கு ஆதரவாகவும் காங்கிரஸுக்கு எதிராகவும் வோட்டளித்தது. இருப்பினும் மக்கள் மனம் மகிழ, அரசுக்குத் தோல்வி ஏற்பட்ட பல தருணங்களும் உண்டு.

வார்தாவுக்கு விஜயம் செய்த ஸி. ஆர், கிராமக் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்யும் நோக்குடைய பல பரிசோதனைகளில் தமது சகாக்களுடன் மகாத்மா ஆழ்ந்து ஈடுபட்டிருப்பதைக் கண்டார். தமது ஒத்துழைப்பாளர்களின் சத்துணவுத் தேவைகள் பற்றிய ஆராய்ச்சிகளிலும் ஈடுபட்டிருந்தார். ஸி. ஆர். தேவதாஸுக்கு எழுதினார்:

''நாலு அவுன்ஸ் கோதுமை, இரண்டு அவுன்ஸ் அரிசி, காய்கறிகள் இத்தனை அவுன்ஸ்.... இவையும் இவை போன்ற வேறு பிரச்னைகளும் இந்தியாவின் புகழ் பெற்ற தலைவருடைய நேரத்தை முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்டிருக்கின்றன. இவை எல்லாவற்றையும் அவர் முழுமையாக ரசிக்கிறார்.''

சென்னை மாகாண சட்ட சபைக்கு நடக்கவிருந்த மூன்று உபதேர்தல்கள் இப்போது ஸி. ஆரின் நேரத்தை முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்டன. அரசும் ஜஸ்டிஸ் கட்சியினரும் இம்மூன்று ஸ்தானங்களிலும் ஜஸ்டிஸ் கட்சி வேட்பாளர்களே வெல்வார்கள் என்று எதிர்பார்த்தனர். மாகாண சட்ட சபைத் தேர்தலில் தேச விடுதலைப் பிரச்னை முக்கியத்துவம் பெறாது என்றும் இம்மாகாணத்தின் பிரச்னைகளே முதலிடம் வகித்து வோட்டுப் பதிவையும் பாதிக்கும் என்றும் அவர்கள் நம்பினார்கள். இப் பிரச்னைகளில் காங்கிரஸ் பலவீனம் அடைந்திருப்பதாகவும் எண்ணினர். (தொடரும்)

தமிழாக்கம்: இ. ராஜேந்திரன்

---

சபாக் காரியதரிசி: 'என்ன சார் இது, இவ்வளவு கூட்டம் வந்தாச்சு; இன்னும் கச்சேரியை ஆரம்பிக்காம இருக்கேளே?'

பாகவதர்: 'சும்மா இருங்க நீங்க வேற! இவ்வளவு கூட்டத்துக்கு முன்னால் நான் இதுவரை பாடினதே இல்லே. பயம்மா இருக்கு!'

—எஸ். சங்கர நாராயணன்



# நாலு பேரிடம் நாலு நூல்கள்

**நாலு பேரிடம் நாலு நூல்களைத் தந்து ஒரு வாரம் சென்ற பின் சந்தித்த போது:**

- எம். பி. சியாமளா
- ஆனந்தி
- தவத்திரு காஸிமீர் ராஜ்
- திரு எஸ். சந்திர மௌளி

## நடிகை

*சென்னை லயோலா கல்லூரி துணை முதல்வர் தவத்திரு காஸிமீர் ராஜ்:*

ஒரு பெண், நடிகை என்று பெயர் எடுக்க வேண்டுமெனில் அவள் என்ன என்ன இன்னல்களைச் சமாளிக்க வேண்டியிருக்கும் என்பதையும் ஒரு நாடக ஆசிரியன் எத்தகைய துன்பங்களைச் சந்திக்க வேண்டியிருக்கும் என்பதையும் கூறுவதுதான் கேசவ் தேவ் எழுதிய மலையாள நாவல் ''நடிகை''.

இரண்டாவது யுத்த காலத்தில் கேரளத்தின் கிராமச் சூழ்நிலையைப் பின்னணியாகக் கொண்டு எழுதப்பட்டது.

இதில் தோன்றும் 'பவித்திரன்' சிறந்த நாடக ஆசிரியனாகவும், உயர்ந்த கொள்கைகள் கொண்டவனாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளான். பவித்திரன் நாடக உலகைச் சீர்திருத்த எடுத்த முயற்சிகள் தோற்றுப் போயினும் முடிவில் பல எதிர்ப்புக்களை வெல்கிறான். நடிகைகளான மீனு, மனோகரி, லீலாவதி போன்றவர்களின் குண இயல்புகளை நன்கு ஆசிரியர் கூறியுள்ளார். பழைய நடிகை மனோகரி தன் அனுபவங்களோடு இன்றைய சூழ்நிலையையும் ஒப்பிட்டுப் பார்க்கிறாள்.

மலையாள மணத்துடன் நாவல் சற்று மெதுவாகத்தான் நகருகிறது. தமிழாக்கம் சிறப்பாக இருந்து புத்தகத்துக்குக் கை கொடுக்கிறது.

''நடிகை'': மூலம்: பி. கேசவ தேவ்; தமிழ்: சி. ஏ. பாலன்; வெளியீடு: கலைஞன் பதிப்பகம், 81, பாண்டிபஜார், சென்னை-17 விலை: ரூ. 9

## ஜே. பி. - ஒரு வாழ்க்கைச் சித்திரம்

*நாடக நடிகை ஆனந்தி:*

அரசியலில் சம்பந்தப்படாத எனக்கு 'இந்தப் புத்தகத்தையா படிக்க வேண்டும்?' என்று சற்று அதிர்ச்சியாக இருந்தது. ஆனால் படிக்க ஆரம்பித்ததும் புத்தகம் ரொம்பப் பிடித்துப் போயிற்று. விறுவிறுப்பான ஓட்டம்.

அறிமுகத்தில் ஒட்டுப் போடும் மச்சான் மனத்தை அழகாகப் படம் பிடித்துக் காட்டியுள்ளார் நூலாசிரியர். ஜே. பி. யின் இளமை நாட்கள் விறுவிறுப்பான பகுதி. அவர் திருமண வாழ்க்கை படிக்கச் சுவையாக உள்ளது. மனைவி பிரபாவதியைப் பற்றி ஆசிரியர் கூறும் நிகழ்ச்சிகள் நம்மைப் பிரமிப்பில் ஆழ்த்துகின்றன.

ஜே. பி. அரசியலில் குதிக்கும் கட்டம் சிறப்பாகச் சொல்லப்பட்டுள்ளது.

அமெரிக்கா செல்லவிருந்த ஜே. பி. சிறியவளான பிரபாவதியை, காந்தி—கஸ்தூரிபா பாதுகாப்பில் விட்டுச் சென்று, பின்பு திரும்பியபோது தம் மனைவி பெரியவளாக வளர்ந்துள்ளதைப் பார்த்துப் பூரிப்பது ஒரு நாவல் காட்சி போன்று நயமானது. விடுதலை இயக்கத்தில் ஜே. பி. ஈடுபட்டு, மக்களுக்காகச் சேவை செய்யும்போது புரிந்த தியாகங்களை நினைக்கவே உடல் புல்லரிக்கிறது.

ஜே. பி.க்குப் பெரும் புகழ் ஈட்டித் தந்த சம்பலமான சம்பல் கொள்ளையர் சரணடைந்த வரலாற்றைப் பற்றி இப்புத்தகத்தில் குறிப்பே காணோம். இது ரொம்பவும் வருந்தத்தக்கதாகும்.

ஜே. பி. - ஒரு வாழ்க்கைச் சித்திரம் எழுதியவர்: ஞான வடிவேலன்: வெளியீடு: சாரல், 12, ஐந்தாவது தெரு, சுப்பிரமணிய நகர், சென்னை-24 விலை ரூ. 8

## அயல் நாடுகளில் என் அனுபவங்கள்

*தேசிய சேவைத் திட்ட மாணவர் திரு எஸ். சந்திர மௌளி:*

அயல் நாடுகளில் தம் அனுபவங்களை இருபத்து எட்டு அத்தியாயங்களில் தொகுத்துள்ளார், ஆசிரியர். ஆராய்ச்சியாளர் என்ற

முறையில் பயணம் செய்ததால் அமெரிக்க நாட்டுக் கல்வி முறை பற்றி மாணவரிடம் கலந்துரையாடித் தெளிவாக விளக்கியுள்ளார். அமெரிக்கர்களின் பொழுது போக்கு அம்சங்களான திரைப்படம், நாடகம், நடனம் முதலியவை குறித்துக் கூறுகிறார். தவிர ஓட்டல்கள், சாலைகள் சுத்தமாகப் பராமரிக் கப்படும் முறை, அவர்களின் சுறுசுறுப்பு முத லியவை குறித்து அழகாகக் கூறியுள்ளார். பாரத நாட்டின் பண்பாடு, கலாசாரம், மதம் இவற்றினிடம் அமெரிக்கர்களுக்கு உள்ள உயரிய எண்ணங்களை ஆசிரியர் விளக் கும்போது பூரிப்பாக இருக்கிறது. ஆங்காங்கே திருக்குறள், கீதை முதலியவற்றிலிருந்து மேற் கோள் காட்டியிருப்பது பாராட்டப்பட வேண்டியதாகும்.

இலக்கியம், சமயம், இவற்றுக்கே அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளதால் இப் பயணக் கதை விறுவிறுப்புக் குறைந்து காணப் படுகிறது. இருப்பினும் புத்தகத்தின் மூலம் அமெரிக்காவை ஆசிரியர் நன்றாகச் சுற்றிக் காண்பித்துள்ளார் என்ற நிறைவும் ஏற்படு கிறது.

அயல் நாடுகளில் என் அனுபவங்கள். எழுதியவர்: டாக்டர் க. பாலச்சந்திரன் வெளியீடு: கோமதி நூல கம், 474, திருவான்மியூர் அண்மை வீட்டு வசதித் திட்டம் சென்னை-41. விலை ரூ. 9

## இளந்தளிர்கள்

*தியாகராய நகர் ராமகிருஷ்ண குழந்தைகள் பள்ளியில் ஆசிரியை குமாரி எம். பி. சியா மளா:*

இளம் தளிர்கள் என்ற இக்கவிதை நூலை மதி ஒளி அவர்கள் சிறு குழந்தைகளுக்காகத் தான் எழுதியுள்ளார். புத்தகம் ஆலிலை வடிவத்தில் அமைந்து நேர்த்தியாக உள்ளது. அட்டைமேல் உள்ள கண்ணன் குழந்தைகளை வரவேற்கிறான்.

புத்தகத்தில் வெற்றிலை, மாவிலை, வாழை இலை, பச்சிலை போன்ற பதின்மூன்று இலைகளைப் பற்றி ஆசிரியர் கவிதைகள் புனைந்துள்ளார். ஒவ்வொன்றிலும் அவ்விலையின் பண்புகளைச் சுவையாகக் கூறியிருப்பது தனிச்சிறப்பாகும். பாக்கள் சொற்சுவை மிகுந்து குழந்தைகள் இன்புறுமாறு நல்ல சந்தத்தில் அமைந் துள்ளன. ஆங்காங்கு தகுந்த படங்கள் ரொம்பவும் அழகாகவும், ரசிக்கும்படியாகவும் உள்ளன.

இதில் புகையிலை பற்றி ஒரு கவிதை உள்ளது. 'இது குழந்தைகளுக்கு அவசியம் தானா?' என்று நினைத்தேன். ஆனால் ஆசிரி யர் ''வேண்டாம் இந்தப் புகையிலை'' என்று முடித்திருப்பது எனக்கும் பதிலளித் தது போல் இருந்தது.

சற்று விவரம் தெரிந்த குழந்தைகள் இந் தப் புத்தகத்தில் உள்ள பாடல்களை நன்கு ரசிக்கின்றன.

குழந்தைகள் ஆண்டில் வெளி வந்தது பொருத்தமே. ஆனால் விலையை நோக்கும் போது குழந்தைகளுக்கு எட்டாக் கனி ஆகி விடுமோ என ஐயம் ஏற்படுகிறது.

இளந்தளிர்கள். ஆசிரியர்: மதி ஒளி, வெளியீடு: சாரதா பதிப்பகம், 37, போயஸ் சாலை, சென்னை-18 விலை ரூ. 14.

—பேட்டி: ''சிக்கி''

❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊

மாதவ ராவ் பேஷ்வாவின் ஆட்சியின் போது, ராமா சாஸ்திரி அம்மாகாணத்தின் மிக முக்கிய மான தலைமைப் பொறுப்புகளை ஏற்றுச் சிறப் பாகச் செயலாற்றினார். பதவிக்குரிய ஆடம் பரங்கள் ஏதுமின்றி அடக்கமாக வாழ்ந்தார்.



புது வருடப் பிறப்பு அன்று, அவருடைய மனைவி, பேஷ்வாவின் தாயாருக்குத் தன் வணக்கங்களைத் தெரிவிக்க அரண்மனைக்குச் சென்றாள். அவளுடைய எளிமையான ஆடை களைக் கண்டு அரச குடும்பத்தினர் வியந்தனர். அவள் வீடு திரும்பும்போது, அவளுக்கு விலை உயர்ந்த ஆடை, ஆபரணங்களை அணிவித்து, சிறப் பாக அலங்கரித்துப் பல்லக்கில் ஏற்றி அனுப் பினர்.

பல்லக்கை, ராமாசாஸ்திரியின் இல்லத்தின் முன் வைத்த வேலையாட்கள், கதவைத் தட் டினர். ராமா சாஸ்திரி கதவைத் திறந்து, பல்லக் கையும் உயர்ந்த ஆடை ஆபரணங்கள் அணிந்து அதில் அமர்ந்திருந்த தம் மனைவியையும் கவனித்தார். வந்த ஆட்களிடம் "நீங்கள் தவறான வீட்டுக்கு வந்து விட்டீர்கள்! உயர்ந்த வாதிகளை உடைய இந்த யுவதி, இந்த எளிமை யான வீட்டில் வசிப்பவளாக எப்படி இருக்க முடியும்?" என்றார். கதவைச் சாத்தி விட்டார்.

கணவனின் கோட்டை புரிந்து உணர்ந்த மனைவி, பல்லக்கை அரசமாளிகைக்கே திருப்பச் சொன்னாள். அங்கு இருந்த தன்னுடைய எளிமையான ஆடைகளை மறுபடி அணிந்தாள். நடந்தே தன் வீட்டிற்குச் சென்றாள். ராமா சாஸ்திரி பிரியத்துடன் மனைவியை உள்ளே அழைத்துச் சென்றார். நடந்தது ஒன்றுமே தமக்குத் தெரியாதது போல் மனைவியிடம் கூறினார்: "நீ வெளியே சென்று இருந்த போது இங்கு என்ன நடந்தது தெரியுமா? ஆடம்பரமான ஆடை ஆபரணங்கள் அணிந்த யுவதி ஒருத்தி என் மனைவி என்று கூறிக்கொண்டு தம் வீட்டுக் குள் நுழையப்பார்த்தாள்! ஏக பத்தினி விரத னான நான், அவளை எப்படி வீட்டுக்குள் அனு மதிக்க முடியும்!"

தகவல்:- சரோஜா நரசிம்மன்.
ஆதாரம்:- பூனா ஹெரால்ட்.

❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊

# சௌந்தர்யமே வருக வருக!

பட விமர்சனம்

ஸ்ரீதர் அவர்களைக் கொஞ்சம் கடுமையாகவே விமர்சிக்க வேண்டி யிருப்பதற்காக வருந்துகிறோம். இளமையை ஊஞ்சலாட விட்டு அழகை ஆராதித்தவரிடமிருந்து அவற்றை விட உயர்வாக, சௌந்தரியத்தையே அழைக்கிறாரே, வித்தியாசமாக விருந்தளிப்பார் என்று எதிர்பார்த்து — வர்த்தக ஒலிபரப்பு விளம்பரங்களில் அதன் பாடல்களைக் கேட்டுக் குதூகலித்திருந்ததற்கு எத்தனை பெரிய ஏமாற்றம்! இத்தனை 'சீப்'பான ஒரு கதையை ஸ்ரீதர் தேர்ந்தெடுத்திருக்க வேண்டாம். யானைக்கும் அடி சறுக்கும். ஆனால் அந்தச் சறுக்கல் அமெரிக்காவில் போய் வழுக்கியிருக்க வேண்டாம். இந்தக் கடத்தல் கதைக்கு — தங்கையைக் கற்பழிப்பவனைப் பழி வாங்குவதற்கு அமெரிக்கா போய் ஆடிப் பாடிக் கூத்தடித்திருக்க வேண்டாம். கடைசியாக இதை ஸ்ரீதர் எடுத்திருக்க வேண்டாம்.

அமெரிக்க ஸ்கைஸ்கிரேப்பர் கட்டிடங்களையும், டிபார்ட்மெண்டல் ஸ்டோர்களையும், கடல் சிங்கத்தின் நீச்சலையும், ஃப்ளை ஓவர் வளைவுகளையும், ஜெயண்ட் வீல்களையும் எத்தனை படங்களில்தான் பார்த்துக் கொண்டிருப்பது? தயாரிப்பாளர்களுக்கு ஃபாரின் டூர் அலுப்புத் தட்டாதிருக்கலாம். ஆனால் பார்வையாளர்களான பொது மக்களுக்கு போரடித்துப் போயிற்று. தங்கள் நாடுகளில் படப்பிடிப்புக்கு அனுமதி கொடுக்கும் அயல் நாட்டினர் தப்பித் தவறி நாம் அங்கு எடுத்த படங்களைப் பார்க்க நேர்ந்தால் நம்மீது மானநஷ்ட வழக்குத்தான் போடுவார்கள். சௌந்தர்யக் கதை அமெரிக்காவில் சட்டம் ஒழுங்குநிலைநாட்ட போலீஸே இல்லையா என்று எண்ணும்படி கற்பனை செய்யப்பட்டிருக்கிறது. இதெல்லாம் எப்படிச் சாத்தியம் என்று நம்மையும் எண்ணச்செய்து வெட்கப்பட வைக்கிறது. 'ரியலிஸம்' என்பதை ஸ்ரீதருமா மறந்துவிட்டார்?

குப்பையான கதை காரணமாக இனிமையான பாடல்களை ரசிக்க முடியவில்லை; இளம் நடிகர் பிரகாஷின் இயல்பான நடிப்பைப் பாராட்ட முடியவில்லை; ஸ்ரீதரின் வசனங்களில் மனம் லயிக்கவில்லை. ஹெலிகாப்டர் சண்டையையும் பாக்கி வைக்காமல் கண்ணன் சிலையுடன் கதாநாயகி காற்றில் ஊசலாடுவதைப் பார்க்கும் போது — 'சௌந்தர்யமே வர வேண்டாம்' என்று வாய் விட்டுச் சொல்லியபடி எழுந்திருக்கத் தோன்றுகிறது.

—கௌசிகன்



கடன் வசூலிக்கும் ஏஜண்ட் என்று சொல்லிக் கொண்டு பம்பாயில் சிலர் இப்பொழுது தோன்றியுள்ளார்கள். வெகு நாட்களாக வசூலிக்க முடியாத கடன்களை இந்த ஏஜண்ட்டுகள் தங்களுக்கே உரிய வழியில் வசூலித்துத் தருகின்றனர்.

கடன் தொகைக்குத் தகுந்தாற் போல் இந்த ஏஜண்ட் ஆட்கள் தங்கள் கமிஷனையும் எடுத்துக் கொள்கிறார்கள். எப்படியாவது திரும்பி வந்தால் போதும் என்று நினைப்பவர்கள் இந்த ஏஜண்டைத் தஞ்சம் அடைகிறார்கள்.

— டைம்ஸ் ஆப் இந்தியா
எஸ். சந்திரசேகர்

# கடைசி சிரிப்பு..! இந்தவாரத்துக்கு!

நிருபர்: "ஃப்ரீடம் அட் மிட்நைட் பற்றி உங்க அபிப்பிராயம் என்ன?"

நடிகை: "இன்னும் மெட்ராஸில் ரிலீஸாகாத இங்கிலீஷ் படம் பற்றி யெல்லாம் அபிப்பிராயம் கேட்டா நான் எப்படி பதில் சொல்றது?"

— உ. ராஜாஜி





அவர்: உனக்கு வண்டி ஓட்டத் தெரியும் என்று சொன்னே?

அவன்: ஆமாங்க... நல்லா ஓட்டின பழக்கம் உண்டுங்க!

அவர்: எத்தனை வருஷம் ஓட்டின பழக்கம் உண்டு?

அவன்: பத்து வருஷம் ஓட்டின பழக்கம் உண்டுங்க!

அவர்: சரி. நாளையிலிருந்து வேலைக்குவா. காரை ஜாக்கிரதையா ஓட்டணும்... என்ன?

அவன்: காரா?... நான் இதுவரைக்கும் மாட்டு வண்டி இல்லே ஓட்டிக்கிட்டு இருந்தேன்!

அவர்: ? ! ! ? ! !

கோ. தீபா

"ஒவ்வொரு புரொட்யூசரும் தன் படத்தில் ஒவ்வொரு பிராணியை நுழைய வச்சு வசூலில் சக்கைப்போடு போடறாங்களேன்னு நானும் ஒரு பிராணியை நுழைய வச்சேன். படம் உருப் படலே...?"

"எந்த பிராணி?"

"ஆமை!"

— கிரிஜா மணாளன்





"புதிதாக நம் வீட்டுக் கதவுலே லெட்டர் பாக்ஸ் வைத்தோமே! ஏதாவது இருக்கா பார்!"

"அப்பவே பார்த்துட்டேன்! துண்டுபீடி நாலு, கோலி ரெண்டு, கூழாங்கல் எட்டு, குப்பைக் காகிதம் 50 கிராம் இருந்தது!"



நிருபர்: பத்திரிகைக்குக் கட்டுரை கேட்டால் எப்பவும் கால் பக்கத்திற்கு மட்டும் எழுதித் தர்றீங்களே?

நடிகர்: கால்ஷீட் கொடுத்துத்தான் பழக்கம்.

—எம். சாம்பமூர்த்தி



Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 90 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 75 மலேயக் காசு